"WORK IS OF A RELIGIOUS NATURE:— WORK IS OF A BRAVE NATURE; WHICH IT IS THE AIM OF ALL RELIGIONS TO BE."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

" HITCH YOUR WAGON TO A STAR."    " TO THINE OWN SELF BE TRUE."




அன்பேசிவம் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.]    [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"**    ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**    **"Approved"**

புத்தகம். **23.**]    ராக்ஷஸ௵ ஆடி௴, **1915**௵ ஜூலை௴    [சஞ்சிகை **4.**

## THE GREAT " WORLD-WAR" AS AN EYE-OPENER.

..." In fact, the man who can ennoble money is he who cares very little for it. The War makes all things plainer to us than they were in times of peace. We now see greed for money as it is, and we no longer reverence the rich man because of what he might do with his money since we have other tests forced upon us than these possibilities. We value a man for what he does, not for what he might do; for his actual personal qualities rather than for his possessions. In that we are like people in a sinking ship, for whom the customary social values are destroyed and a man is a man only if he proves himself one .....The money test is for the time abolished. We know by our own experience at last that a man may be poor, not because he is a fool or a weakling, but because he cares for other things than money. But shall we remember this when peace comes again? ..........there is nothing which hinders us from exercising our own judgement as the reverence for money. It hides from us our own greed and the greed of others. It spreads a fog of decorum where there ought to be no decorum at all; it makes us think there is peace where there is a sharp material war. And this War not purely material opens our eyes to the nature of the other. It will have one good result at least if it keeps them open."—*The (London) Times.*

"The War will leave the world poorer in wealth but simpler in habits and more real in all its doings."—*An English Gentleman to a friend.*

# ON THE UPLIFTING POWER AND RELIGIOUS NATURE OF WORK.

"THE SACREDNESS OF WORK."

"There is a perennial nobleness and even sacredness in Work. Were he never so benighted, forgetful of his high calling, there is always hope in a man that actually and earnestly works: in Idleness alone is their perpetual despair. Work, never so Mammonish, mean, *is* in communication with Nature; the real desire to get Work done will itself lead one more and more to truth, to Nature's appointments and regulations, which are truth.

"THE GOSPEL OF WORK."

The latest Gospel in this World is: know thy work and do. 'Know thyself:' long enough has that poor 'self' of thine tormented thee: thou will never get to know it, I belive! Think it not thy business, this of knowing thyself; thou art an unknowable individual: Know what thou canst work at; and work at it, like a Hercules! that will be thy better plan.

"THE SIGNIFICANCE OF WORK."

It has been written, 'an endless significance lies in Work;' a man perfects himself by working......Consider how, even in the meanest sort of Labour. the whole soul of a man is composed into a kind of real harmony, the instant he sets himself to work! Doubt, Desire, Sorrow, Remorse. Indignation, Despair itself, all these like helldogs lie beleaguering the soul of the poor dayworker, as of every man: but he bends himself with free valour against his task, and all these are stilled, all these shrink murmuring far off into their caves. The man is now a man. The blessed glow of Labour in him, is it not as purifying fire, wherein all poison is burnt up and of sour smoke itself there is made bright blessed flame.

"Blessed is he who has found his work; let him ask no other blessedness. He has a work, a life-purpose; He has found it, and will follow it

"THE RELIGIOUS NATURE OF WORK."

Work is of a religious nature:—Work is of a *brave* nature; which it is the aim of all religion to be. All work of man is as the swimmer's: a waste ocean threatens to devour him; if he front it not bravely, it will keep its word. By incessant wise defiance of it, lusty rebuke and buffet of it, behold how it loyally supports him, bears him as its conqueror along. 'It is so,' says Goethe, 'with all things that man undertakes in this world.'—Extract from the lesson on Labour from Thomas Carlyle's 'Past and Present.' (*Vide the Matriculation Text for* 1915.)

"LABOUR IS LIFE."

"Labour is Life: from the inmost heart of the Worker rises his God-given Force, the sacred celestial Life-essence breathed into him by Almighty God: from his inmost heart awakens him to all nobleness,—to all knowledge, 'self-knowledge' and much else, so soon as Work fitly begins. Knowledge? The knowledge that will hold good in working, cleave thou to that; for Nature herself accredits that, says Yea to that. Properly thou hast no other knowledge but what thou hast got by working, the rest is yet all a hypothesis of knowledge; a thing to be argued of in schools, a thing floating in the clouds, in endless logic-vortices, till we try it and fix it. 'Doubt of whatever kind, can be ended by action alone."—*Ibid.*

"YOU WILL NOT, I HOPE, LOSE HEART."

"I have not forgotten the important work you are striving to initiate among your fellow-countrymen. Owing mainly to the ceaseless pressure of my official duties in Madras, I was not able to give you that help which I wished to give, or that encouragement which you so well deserved. I have now leisure and if I can in this country do anything to help you, I hope you will let me know. I hope your European friends in Madras are supporting you, and I also trust you will in time gather round you a band of native fellow-workers of influence and education. At times, the progress will seem to you so slow that you will feel inclined to give the work up in sheer despair. But you will not, I hope, lose heart. Every social improvement of a fundamental kind is slow in its operation and a movement like yours, which affects the ideas and sentiments and confirmed habits of centuries, cannot but be slow in manifesting its effects."—Dr. D. Duncan, M.A., D.Sc. late Director of Public Instruction, Madras.

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-4

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸஸூ ஆடிமீ } விவேக  சிந்தாமணி { July-August 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றோ மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னோஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## THE GREAT WORLD-WAR AS AN EYE-OPENER.

### பார'தப்போரும் நாரதமுறையும்.

"பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு" என்பது ஸ்வானுபவத்தின் விசேஷத்தை யெடுத்துச் சொல்லும் ஓர் சிறந்த பழமொழி. நாரத முனிவர் இதன் உண்மையில் மிக நம்பிக்கையுடையவர். ஆகையால் அவர் "யதார்த்தவாதி வெகுஜன விரோதி" யென்கிற உலக வசனப்படி உண்மையைப் பேசி வெகுஜன விரோதம் சம்பாதித்துக்கொள்வதைவிட "விதைத்தான் வினையறுப்பான்" ஆதலால் அவனவன் எண்ணத்தின் பலனை அவனே அனுபவித்துப் பார்த்தபின் உண்மையறிந்து கொள்ளட்டுமென்று அவனவன் போனதே போக்காகப் போகவிட்டு வேடிக்கை பார்த்துவந்தார். உண்மையை ஒளிக்க முடியாதாகையால் அது எப்படியும் வெளியாகிவிடும். நாரதர் உண்மையை உள்ளபடி யுரைப்பதே விரதமாகக்கொண்டவர். உலகபந்தத்தை யறுத்து திரிலோக வாசியாக பொதுநலஞ் செய்வதே பூரணமான பகவதாராதனையாகக் கொண்டு திரிலோக சஞ்சாரஞ்செய்து வந்தார். அவர் உண்மையை ஒளிக்காமற் சொல்லிவந்ததால் அவருடைய வார்த்தைகள் விஷயப் பற்றுடையாருக்குள் கலகத்தை விளைத்து வந்தது. ஆதலால் அவருக்கு "கலகப்பிரியர்" என்கிற சொட்டுப்பேர் வரலாயிற்று. ஆனால் உண்மையில் கலகஞ் செய்யவேண்டுமென்று கோட் சொல்லித் திரிந்தவரில்லை. "பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு" என்று அவரவர் செய்கையின் பலனை அவரவர் அனுபவித்துப்பார்த்து அப்புறம் உண்மை தெரிந்துகொள்ளட்டுமென்பது அவருடைய கொள்கை. இதுதான் சாசுவதமான ஞானசாதனமென்று இப்பொழுது நடந்துவரும் பார'தப் போரால் தெரியவருகிறது.

இந்தச்சண்டை துவங்குமுன்னர் பணத்தின் பெருமையே பெருமையாக விருந்தது. எல்லாரும் பணத்தையே விசேஷமாக மதித்து வந்தார்கள். பணத்தைவிட குணம் பெரிது என்பதை மறந்துபோய் விட்டார்கள். பணச்செருக்கு, பணஆசை, பணப்பைத்தியம் ஆகிய இம்மூன்று பேய்களும் ஒன்றுவிட்டால் ஒன்று மனிதரைப் பிடித்து ஆட்டிவந்தது. ஆயினும் பணத்தால் ஆவது என்ன? அது தன்னால் ஆசை பூர்த்தியாவதில்லை. ஆனால் ஆசைப்பட்டதைத் தேடிக்கொள்ள அது ஒருசாதனமாயிருக்கிறதுபற்றி அதையெல்லாரும் விசேஷமாக மதித்து வந்தார்கள். பணம் கையிலுள்ளவன் பணச்செருக்குப்பிடித்து மமதைகொண்டு தன்னையறியாமல் கண்டதேகாட்சி கொண்டதே கோலமென்று தலைவிரிகோலமாய் விஷய சுகம் புசிப்பதில் கண் பஞ்சடைந்து பழம் பெருச்சாளியாய் வசித்து வந்தான். பணமில்லாதவன் பணவாசைகொண்டு உலகிற்செய்யாதனவெல்லாம் செய்து பணம் ஒன்றே பெரிதாக நினைத்து அதைப்பெற பொய்வழி சென்று படாத பாடெல்லாம் பட்டுழன்றுவந்தான். பணம் சேர்ப்பதில் கை தேர்ந்தவர் பின்

னும் பணஆசை மேற்கொண்டு பணம் தேடிக் குவிப்பதே தொழிலாகப் பணப்பேய் பிடித்துப் பேயாட்டம் ஆடிவந்தார்கள். இப்பொழுது பணத்தின் பெருமை குலைந்து போய் விட்டது. பணக் குவியல் எதிரியை எதிர்த்துச் சண்டைபோடத் தக்கதல்லவென்று கண்டு கொண்டார்கள். குண்டு வெடிகளால் சண்டை போடுவது எளிதெனப்பட்டாலும் குண்டு வெடிகள் செய்ய ஆள் மாகாணமும் மனிதன் உழைப்பும் இன்றியமையாததென்று கண்டு கொண்டிருக்கிறார்கள். பணத்தைவிட குணமும் மணமுமே பெரிதென்று நினைக்கத் துவங்கி யிருக்கிறார்கள். இந்த நினைவு எத்தனை காலமிருக்குமோ அதுதான் சந்தேகம். சண்டை யோய்ந்து சமாதானம் வந்ததும் இதையெல்லாம் மறந்து விடுவார்களோ வென்று லண்டன் டைம்ஸ் பத்திரிகை அஞ்சுவதாகக் கூறுகின்றது.

இப்பொழுதுநடக்கும் பார'தப்போருக்குக் காரணம் இன்னதென்று உத்தியோக முறையில் வெளியிட்ட சங்கதிகளை யாராய்ந்துணர்ந்து அவற்றைச் சுருக்கமாய் வெளியிட்டெழுதியுள்ளோம். ஆனால் உளக்கண்ணால் பார்க்கில் இந்தச் சண்டை யெப்போதும் நடந்து கொண்டே தானிருந்தது என்று டைம்ஸ் பத்திரிகை கூறுகின்றது. பணக்காரன் பணத்தைக் குவித்துவைக்க, ஏழைகள் நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட வுழைத்துவிட்டுச் சீவனவகை கிட்டாது வருந்தினார்கள். இது ஏழைகளுக்கு எவ்வளவு கஷ்டம்! இந்தக் கஷ்டத்தைத் தானே இப்பொழுது ஏற்றத் தாழ்வின்றி யெல்லாரும் சண்டைமுகத்தில் அனுபவிக்கிறார்கள். பணமே பெரிதென்றுழைத்த காலத்தில் பணந் தேடுவதிலுண்டான கஷ்ட நஷ்டங்கள் ஏழைகளைப் பாதித்து வந்தன. இப்பொழுது பட்டனுபவித்தபின் பணம் பெரிதல்ல குணமே பெரிதென்று தோன்றுகிறது.

இந்தச்சண்டை எப்பொழுது முடியுமோ சொல்வதற்கில்லை. ஆனால் எப்படியும் ஒருவிதத்தில் முடிவுக்கு வந்துதானே ஆகவேண்டும். அப்பொழுது இச்சண்டையினால் உலகம் மிக ஏழைப்பட்டிருக்குமென்றும் மனிதர்கள் போலிக்குழைப்பதைவிட்டு உண்மைக்குழைக்க நேரிடுமென்றும் ஒரு ஆங்கிலேய கனவான் அவருடைய நண்பருக்கு எழுதிய கடிதத்தில் வெளியிட்ட அபிப்பிராயத்தை மேலெடுத்தோதியிருக்கிறோம்.

இச்சண்டையினால் பொய்யும் புனைசுருட்டும் ஒழியுமானால் அதுவும் நல்லதுதான் என்று நினைக்கிறார்கள். ஆனால் அது பட்டனுபவித்தவர்களுக்குத் தான் தெரியுமேயன்றி மற்றப்படி மிருகப் பிராயமாய் உண்டுடுத்துறங்குவதே தொழிலாய் நடந்து வரும் மூடாத்மாக்களுக்குத் தெரியாது. ஆனால் இவர்கள் எப்பொழுதும் ஆட்டுமந்தையைப்போல் தலையாடு போன வழியில் போகிறவர்கள். ஆதலால், புத்தியுள்ளவர்கள் பட்டனுபவித்து நல்வழிப்பட்டால் அவர்களைப்பார்த்து இவர்களும் பின்பற்றுவார்கள். இந்தமட்டில் உலகம் நல்வழிப்படுமாயின் அதுவும் ஒருவிதத்தில் நல்லதுதான்.

## "LABOUR IS LIFE."

## "பிழைக்கும்வழி உழைக்கப் பழகுவதே."

இது மிகவும்மேலான ஒருமூதுரை. இதிலே "பிழைக்கும்வழி" யென்பது இகபரமிரண்டுக்கும் ஒக்கப்பொருந்தும். அப்படியே உழைக்கப்பழகுவதும் ஸ்தூல சூக்ஷ்ம காரணமாகிய மூன்று தேஹத்துக்கும் பொருந்தும்.

"திடகாத்திர, ஆயுர், ஆரோக்கியம்" என்கிற மூன்றுவித சம்பத்தும் இகபரமிரண்டுக்கும் இன்றியமையாத சாதனங்களாம். திடகாத்ரம்: சரீரப்பயிற்சியின்றி சரீரத்துக்குத் திடமில்லை; அதுபோல் மனப்பயிற்சியும் கூடவேயிருக்கவேண்டும். ஏனெனில், மனோதைரியமில்லாத தேஹதிடன் பிரயோசன மற்றதாகும். தேஹமனோதிடன் இரண்டும் அமையப்

பெறினும் "உயிருடல் உறவறியும் உண்மையறிவு" இல்லாவிடில் ஆயுஸ் தீர்க்கமில்லை. ஆயுஸ் இருந்தாலும் ஆரோக்கியமில்லை. ஆரோக்கியமில்லாத ஆயுஸ் உள்ளவர்கள் "நெட்டுயிர்ப்போடுற்ற பிணம்" ஆவர். ஆகையால் தேஹம், மனம், உள்ளறிவு என்றுசொல்லும் அந்தக்கரணம் ஆகியமூன்றும் பயிற்சியினால் தேர்ச்சியடைந்து சுத்தப்படவேண்டும். இதைப்பற்றி மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்குக் குறிப்பிட்ட இங்கிலீஷ் பாடத்திலிருந்து ஒரு பகுதியை யெடுத்து இங்கிலீஷில் தானே அச்சிட்டுள்ளோம். இதேவிஷயமாய் விவேகசிந்தாமணியில் வெளிவந்த கர்மதர்மத்தை யுணர்த்தும் விஷயத்தின் நற்போதனை "தாமஸ் கார்லைல்" என்னும் ஆங்கிலேய வித்வான் உழைப்பின் மஹத்துவத்தைப்பற்றி யெழுதியிருக்கும் உண்மைக்கும், "லாங்பேல்லோ" என்னும் ஆங்கிலேய கவிவாணவர் கருமானைக் கருமவழி காட்டுவோனாகத் தூக்கி வைத்து எழுதியிருக்கும் அருமையான திருவருட்பாவுக்கும் ஒத்திருப்பதால் "பிழைக்கும்வழி: உழைக்கும் வழி" என்னும் தலைப்பெயரிட்டு ஸ்ரீஸத்யானந்த சாந்த சர்மா எழுதிய அவ்விஷயத்தைப் பாலர்க்கும் பாலபோதசிக்ஷை செய்யக்கடமைப்பட்ட அவர்களின் பெற்றோர்கள் போதகாசிரியர்க்கும் பயன்படும்பொருட்டுக்கீழே திருப்பிப் பிரசுரிக்கிறோம். இதைப் பல பத்திரிகாசிரியர்களும் எழுதினோர் பேரை யொளித்து அவர் அனுமதியின்றி வெளியிட்டிருக்கிறார்கள். திருட்டுப்படிப்பு குருட்டு வழி காட்டுமென்றிருப்பதால் குருத்துரோகமின்றி உண்மையுணர்ந்துய்யவேண்டும். குருத்துரோகம் நினைப்பார் உருப்படமாட்டார்.

* * * * *

இங்கே "தாமஸ் கார்லைல்" எழுதியிருப்பதின் கருத்தைச்சுருக்கி ஆங்கிலமறியாரும் அவர் பாவனைவிசேஷமஹிமையை உணரவேண்டிக் கீழே வெளியிடுகிறோம் :—

"உழைப்பின் மஹத்துவமும் அதனால் லபிக்கும் ஹிருதயசுத்தியும் கவனிக்கத்தக்கது. அவிவேகியாயினும் உழைப்ப உழைத்து உழைக்கும் வழிகற்றுக்கொண்டு அதனால் கர்ம தர்மமுணர்ந்து மனந்தேறி மோக்ஷ ஸாம்ராஜ்யத்துக்கும் பாத்திரனாய்விடுவான். ('லாங்பேல்லோ'வின் "The Village Blacksmith!" என்னும் கவியின் நீதிபோதனையை யுணர்த்த "கருமானே,—கருமவழிகாட்டினோனே!" யென்றெழுதியிருக்கும் விஷயத்தை ஊன்றிப் படித்துப்பார்க்க இது விளங்கும்.)

"கர்மதர்மத்தை யுணர உழைத்துத் தேறினபின், 'பிரகிருதியின் உண்மையில் பரமனைக் காணலாம்' என்றபடி சோபான முறையாக (படிப்படியாக, கிரமேண) ஸத்யத்தையறிந்துய்யலாம். பணவாசைப்பட்டுழைப்பவனும் உண்மையிலுழைக்க, உழைப்பினால் வரும் கர்மதர்ம பலனையனுபவிக்காது போகான்.

"ஆத்மஞானம் தேடிப்பிழைப்பது கிடக்கட்டும். கலிமுற்றிய இக்காலத்தில் கருமமே பிரதானம். ஆகையினாலே ஸ்வதர்மம் தவறாமல் கர்மவழிப்பட்டுச் செய்யவேண்டிய கருமத்தைச்செய்துழைப்பாராக. உழைப்பின் பலனாய் வரும் கர்மதர்மஞானத்தினால் ஆத்மஞானமும் படிக்கிரமத்தில்தானே ஸித்திக்கும். கர்மலோபம் மட்டும் செய்யாதே! மோசம் வந்து விடும்!

"உளவறிந் துழைப்பான் உண்மையிற்றலைவ"னாதலால், "தன்னையறிந்தவன் தலைவனாவான்" என்னும் ஞானமார்க்க வுண்மையைக் கேட்டு நீ மயங்கவேண்டாம். புத்திசாலிகள் கருடனைப்போல் ஆகாசத்திற் பறந்து மோக்ஷ வழி தேடட்டும். எறும்பு ஊறும் வழியை நீ மறந்து விடாதே. "எறும்பூறக் கல்லும் தேயும்" என்றிருப்பதால், உழைப்பைக் கொண்டு உன் ஆத்மா பிழைக்கும் வழியையும் நீ தேடிக்கொள்ளலாம் என்பதை மறவாதே! தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்கிற புருஷார்த்தம் நான்கும் கர்மவழியில் ஸித்திக்கும். ஆத

லால் "கர்ம மார்க்கத்தில்" புருஷார்த்தம் நான்கும் அடங்கியிருக்கிற தென்று பெரியோர் சொல்வாக்குப் பொய்யல்ல.

"வீண் மனோராச்சியம் செய்யாது கைக்கு வந்த வேலையைத் திரிகரணசுத்தியாய் கர்ம லோபமின்றிச் செய்வாயாக! அப்பொழுது உழைப்பின் மஹத்துவத்தை நீ உண்மையில் உணர்வாய்! கோபதாபங்களெல்லாம் உழைக்கும் வழியினுழைப்பவனை விட்டோடிப்போம். ஏனெனில் கர்மத்தீ தாபஸாக்னியைப் போல் மனதிலுள்ள அழுக்கு ஆறையும் எரித்துத் தஹித்துவிடும். அழுக்காறு நீங்கவே மனத்தெளிவும் சாந்தமும் ஹிருதயசுத்தியோடு தானே வந்து லபிக்கும்.

"ஸ்வதர்மம் பிசகாமல் கர்மவழிப்பட்டவன் பாக்கியமே பாக்கியம். அவனுக்கு வேறு பாக்கியம் தேவையில்லை. இடம் பொருள் ஏவல் மூன்றும் அவனுக்கு கர்ம தர்ம பலத்தினாலே சொன்னபடி கேட்கும் ஊழியராக நின்றுதவும்.

"கர்மவழிதானே தர்மவழி காட்டும்('Work is of a religious nature'). அதுவே தீரத்தையும் அளிக்கும். ('Work is of a *brave* nature'). எல்லா வேலையிலும் அலையுமனத்தை யடக்கியாளுதல் மஹா பெரிய வேலை! நந்தன் கரும வழியிலிருந்தே தருமவழிப்பட்டான். அவன் தருமவழிப்பட்ட பின்னும் கருமவழியை விடவில்லை. கோயிலில் வாத்திய கோஷம் முழங்குவதற்கின்றியமையாத வார், தோல் இவைகளை திருப்பணி (Sacred Work) வேலையாகச் செய்துவந்து சாலோக, சாமீப, சாருப்ய, சாயுஜ்ய பதவியெல்லாம் பெற்றுக் கடைசியில் அகண்டாகாரமானானே யன்றி, அவன் தன்தொழிலைவிட்டு வேதமோதவும், சாஸ்திரம்படிக்கவும் ஆசைப்பட்டவனல்லன். எல்லா சாஸ்திர ஞானமும், எல்லா வேத உண்மையும் கர்ம வழிப்பட்டு கர்ம தர்மம் தவறாமல் உழைப்பவனுக்குத் திருவருட் பிரஸாதமாகத் தானே கிடைக்கும்.

"கர்மவழியினுழைப்பவன் சமுத்திரத்தில் நீந்துவோனை யொப்புவன். எங்குமொரே பிரளயமாகப் பரவிய சமுத்திரவெள்ளம் அவனை விழுங்கிவிடப் பார்க்கிறது! அவனோ அஞ்சாத நெஞ்சனாய், அதை யெதிர்த்து நின்று, கையாலும் காலாலும் அம்மஹாவெள்ளத்தை உதைத்துத் தள்ளியும் அணைத்துத் தழுவியும் ஜயசீலனாக நீந்திச்செல்கிறான். அப்படியே இவ்வுலகில் கர்மவழிப்பட்டுழைப்போனும் அதற்கு விரோதமாயிருக்கும் தடைகளை யெதிர்த்து வென்று கர்மத்தைச் சாதித்துக்கொள்வான். "இதுவே கர்மதர்மம்: உலகதர்மமும் இதுவே" யென்று கீதே (Goethe) மஹா கவி கூறுகின்றார்."

* * * * *

"தாமஸ் கார்லைல்" அவர்கள் அபிப்பிராயத்தைச் சாங்கோபாங்கமாய்ச் சொல்லி முடித்தோம். இனி "பிழைக்கும் வழி: உழைக்கும் வழி" யென்னும் தலைப்பின் கீழ் ஸ்ரீ ஸத்யாஸந்த சாந்த சர்மா விவேகசிந்தாமணிக் கெழுதினதை யெடுத்துக் கீழே பிரசுரிக்கிறோம். இரண்டையும் நன்றாகப் படித்து அடுத்துவரும் "கருமானே,-கர்மவழிகாட்டியோனே" என்று "லாங்பெல்லோ" எழுதியுள்ள கவியின் நீதிசாரத்தையனுசரித்து எழுதியுள்ளவிஷயத்தையும் ஊன்றிப்படித்து ஆய்ந்தோய்ந்து உண்மையறிந்து கொள்ளக்கடவீர். இவற்றோடு "பாரதப்போரும், நாரதமுறையும்" என்னும்விஷயத்திற்கண்ட வுண்மையையும் உள்ளத்தமர்த்திச் சிந்திப்போர் இவ்வுலகம் போகும் போக்கை ஒருவாறு உற்று நோக்கியுணரத் தவறார்.

## THE GOSPEL OF "STRENUOUS LIFE."

"WORK TO LIVE AND LIVE TO WORK."

*(Vide "Labour is Life." in p. 98.)*

(Vide "Labour is Life." in p. 98.)

### "பிழைக்கும் வழி: உழைக்கும் வழி."

(ஸ்ரீ ஸத்யாநந்த சாந்த சர்மா எழுதியது.)

I

"பிழைக்கும்வழி உழைக்கப்பழகுவ"தென்றுருண்மையே!
உழைக்கும்வழியை உரைத்திடக் கேண்மினோ:
உழைப்பெனப்படுவது இழுக்கறப்பிழைத்தலாம்;
பிழைப்பும் உழைப்பும் பிழைபடாச்செல்வம்:
உழைப்பவன் பிழைப்பன், பிழைப்பவன் உழைப்பன்;
உளவறிந்துழைப்பான் உண்மையிற்றலைவன்;
பிழைபறப் பிழைப்பவன் பெரியோனவன்;
உழைப்புக்கும் பிழைப்புக்கும் ஒற்றுமை வேண்டும்;
உழைப்பொடு பிழைப்புமே பொன்றுதாகில்
நுழைவழி கண்டு நுழைந்திடும் வறுமை,
பிழைபறப் பிழைக்கும் வழியுமே தேயும்,
ஏழைகள் வருந்தக் கோழைப்படுமறம்;
கோழைப் பட்டுக் குன்றும் அறமாயின்
ஏழைமைப்பட்டு அழிந்திடும் ஆக்கம்;
அழிந்திட ஆக்கம் குறைந்திடும் ஊக்கம்;
எப்படியென்பது இயம்பக்கேண்மின்:—

II

"உழைப்பவ னுழைத்தும் பிழைப்பில னாகில்
பிழைப்பவ ரெல்லாம் பிழைபடு செல்வராம்;
பிழைப்பே உழைப்பும் உழைப்பேபிழைப்புமாய்
ஏழைக்கிரங்கு மீசன் படைத்தான்;
பிழைபட அவன்விதி பெல்லாம் பிழைபடும்;
ஏழைகள் எளிமையில் வருந்தியே நலிவர்;
கோழை மனத்தர் குவித்திடுவர் தனம்;
பாழையுழுது பண்படுத்தவாற்றார்
ஏழைகளுழுதிட வைத்துப்பிழைப்பர்;
ஊழைப் பெரிதாய் உகந்துமேகூறி

கூழைக்குடித்துப் பாழையுழுவென்பர்;
உழுதுழுதுழைத்தவன் கூலியைப்பிடித்துப்
பொழுது போனதும் பழுதுபாராட்டுவர்:
பழுதுகள்சொல்லி யுழுதவன்கூலியை ஒட்டப்பிடிப்பர்,
உழுதவன் அழுதுயிர் ஒட்டிப் போகப்
பழுது சொன்னவன் பணத்திற் பெருப்பன்."

III

"பணம் பணமென்று பணவாசைப்பட்டு
பிணமதுபோலும் பணத்தைச் சுமப்பர்;
பணத்தைச்சுமப்பார் குணத்தைமறப்பார், பின்
மாசுணம்போலுண்டு மயங்கிக்கிடப்பார்;
காசுபணம்வேண்டிக் கர்மத்தைமறப்பார் *
தாசிவேசியோடு நேசித்திருப்பர்;
ஊசிமுனை மேல்நிற்கும் உள்ளறி வதனை
வேசிய ருறவால் நேசியா தொழிவர்;
காசிராமேச்வரமென்று பேசியே திரிவார்
நாசிமேல் நாட்டம்வைத்து வாசியை யறிபார்;
கூசிடாது பணத்தைக் குவித்துமே வைத்து
புசிக்கும்வகை யறியாது புலாலை வளர்ப்பார்;
நேசித்துப் பானத்தை வானத்தை யொறுப்பார்
பூசித்துநேசித்த புண்யத்தைமறப்பார்;
ரேசிததுப்பூரித்து வாசிவசம்செய்யார்
வாசித்துவழக்குரைத்து வகைமோசம்போவார்."

IV

"வகைமோசம் தாம்போவார் பகைமோசம் செய்வார்;
நகைமோசம் † செய்தவர் ஊர்மோசம்செய்வார்;
வகைவகையாப் பேசியவர் வார்த்தைகளை வளர்ப்பார்;
சிகைசிகையா ‡ வேதத்தைச் சீச்சீயென்றெறுப்பார்
பகையென்றும் உறவென்றும் பாராது பேசி யவர்
நகையென்றும் நட்டென்றும் பணத்தையே சேர்ப்பார்;
வகைவகையா அவர்செய்யும் மோசத்தைச்சொல்லில்
பகைபகையாச்சொன்னோரைப் பகைத்துமே காய்வார்;
ஆகையினாலே அனைத்தையுஞ்சொல்லாது இனத்தையே கோறி
ஊகையினாலேயிதை உணர்ந்திடுமென் றுரைப்பேன்."

* கர்மம் வளரும் தர்ம விதியை மறப்பார்.
† பொய்ச்சிறிப்புக்காட்டி.
‡ குடுமிவைத்தவர் = குடித்தனக்காரர் ஒவ்வொருவரும்.

V

"ஏழைகள் பிழைக்கும் வழியெதுவென்றேசில்,
கோழைகள் தாமாகிக் குழையாது பிழையாது
ஏழைக் கிரங்கும் ஈசனே துணையென்று
ஊழைக்கண்டஞ்சாது ஊழ்வினையை வளர்க்காது
நாழிகை தோறும் நமனுண்டென்றஞ்சாது" *
ஊழூழிகாலமா யுள்ளதொரு ஆத்மன்
† ஆழி கையேந்தியே ஏழைதம் முள்ளத்தில்
நாழிகைதோறும் ஆள்கிறனென்றெண்ணி
கோழை மனத்துடைக் குணக்கேடரைவிட்டு
‡ ஏழைபங்காளன் இனத்தோடேசேர்ந்து
"உழைப்பேனுழைப் பேனுனுய்யவே யுழைப்பேன்"
"இழைப்பேனிழைப்பேன்வல் விதியையுமிழைப்பேன்" $
என்றுறங்கொண்டு உள்ளத்தேயுணர்ந்து
கன்றுதன் தாய் பால் குதித்தோடுமாபோல்
"ஊருக்குழைத்துநா னுதாரியாவேனென்"
றுரையும் தஞ்சமென் றஞ்சியடையாது
பேரையும் ஊரையும் பெரிதாகவெண்ணுது
சாரையும்பாம்பும் சேர்ந்துறையுந் தன்மைபோல்
தானுந்தன்னீசனுஞ் சேர்ந்துழைக்கவல்லீரேல்
ஏழையும் பிழைக்கலாம் ஏழுலகும் ஆளலாம்
இது சத்தியம் சத்தியம், சத்தியமிது சத்தியம்."

* தேஹோஹம் என்கிற பாவனையினுலேயே சாவுக்கஞ்சம் பயமுண்டாகிறது.

† சக்ரதரனும்.

‡ சத்துக்களுடைய சாதுசங்கம் பாராட்டி.

$ "தான் முன்னஞ்செய்த விதி வழிதானல்லால், வான் முன்னஞ்செய்தக்கு வைத்ததோர் மாட்டில்லை' என்பது திருமந்திரம். Compare Longfellow in "THE VILLAGE BLACKSMITH."

" Thus at the flaming forge of life
Our fortunes must be wrought
Thus on its sounding anvil shaped
Each burning deed and thought."

## THE VILLAGE BLACKSMITH

I

UNDER a spreading chestnut-tree
The village smithy stands :
The smith, a mighty man is he,
With large and sinewy hands ;
And the muscles of his brawny arms
Are strong as iron bands.
His hair is crisp, and black, and long ;
His face is like the tan ;
His brow is wet with honest sweat,
He earns whate'er he can,
And he looks the whole world in the face,
For he owes not any man.

II

Week in week out, from morn till night,
You can hear his bellows blow ;
You can hear him swing his heavy sledge,
With measured beat and slow,
Like a sexton ringing the village bell,
When the evening sun is low.
And children coming home from school
Look in at the open door ;
They love to see the flaming forge,
And hear the bellows roar,
And catch the burning sparks that fly
Like chaff from a threshing-floor.

III

He goes on sunday to the church,
And sits among his boys ;
He hears the parson pray and preach,
He hears his daughter's voice
Singing in the village choir,
And it makes his heart rejoice.
It sounds to him like her mother's voice
Singing in Paradise !
He needs must think of her once more,
How in the grave she lies ;
And with his hard, rough hand he wipes
A tear out of his eyes.

IV

Toiling,—rejoicing,—sorrowing,
Onward through life he goes ;
Each morning sees some task begin,
Each evening sees it close ;
Something attempted, something done,
Has earned a night's repose.
Thanks, thanks to thee, my worthy friend,
For the lesson thou hast taught !
Thus at the flaming forge of life
Our fortunes must be wrought ;
Thus on its sounding anvil shaped
Each burning deed and thought.

H. W. LONGFELLOW.

## THE LESSON OF "THE VILLAGE BLACKSMITH."

(AFTER H. W. LONGFELLOW.)

" கருமானே,—கருமவழிகாட்டிபோனே ! "

1. வாதாமரமொன்று பரந்துவிரிந்து நிழல்தந்து நிற்கவே
சாதா'ஜனங்கட் குபகாரமாகும் கருமான்பட்டடை யதன்கீழே
நாதாவென் றவன்தினமும் காலை'ல்வேலை தொடங்கு'றான்பார் !
வேதாவென் றவன்வீசும் சம்மட்டிகரும்பொன்னை இஷ்டம்போலுருவாக்கும் [விந்தையைப் பார்!

2. பாரவன் தேஹ வலியை அம்மா !
பாரவன் கையின் வன்மையை நீ !
பாரவன் கைவலி யாவிரும் பையெல்லாம்
ஊரவர்க் குதவியாம் கருவியா வமைக்கிறானே!

3. மயிர்க்குச் செடுக்கமிக மயிர்'கருத்து வளர்ந்திருக்க
உயிர்ச்சலிப் பின்றியே உள்ளம்வேலை' லமர்ந்திருக்க
பயிர்ச்சியா லவன்தேஹம் பதப்பட்டு வியர்வைசொட்ட
வயிற்றுவளர்ப்புக்காத் தினமானம் வந்ததையன்றன்று தேடியுண்பானவன்.

4. உண்பா னவனூணும் ஊரார்கை பார்க்காமல்
கண்பார்வை யவனுக்குப் பணத்திலில்லை! கண்டுணர்வீர்!
விண்பூர்வை யுண்டவன் பட்டடைக்கா லுலகத்தா
ரெண்சார்பும்தயவும் தேவையில்லைப் போலவற்குப் பயமுமில்லை!

5. தினமானம் அவன்கொல்'லைத்' துருத்தி யூதும்
தினமானம் அவன்கைச்சம் மட்டியோடி வேலைசெய்யும்
தினமானம் அவன்மோன கானம்செய் தடிச'மட்டி
தினமானம் தொழவழைக்கும் கோயின்மணி போன்றதே !

6. பள்ளியிற் படிக்கும் சிறார்மாலை வீடுபோங்கால்
வெள்ளியம் பலக்கூத்துப் போலவே பட்டடையில்
துள்ளிக் குதித்தவன் வேலைசெய்காட்சியைக் கண்டுபோவார்
கள்ளமில்லாதவன் பட்டடைவேலையிற் பறக்கும்பொரியைப் பதறொன்றள்ளி !

7. ஆதிவாரந் தோறும்ஆலயந் தொழுவதற் கவன்போவான்
தீதிலா அவனுள்ளம் அவன்மக்கள் நடுவிருந்தே
ஆதியைத் தொழுங்கீத நாதக்குழாமி லவன்மகளும்
நாதஞ்செய் நல்லிசை குரலைக்கேட் டுவக்கும்பாரே !

8. அருமையா மவன்மகள் குரலைக்கேட் டவனுமுள்ளே
அருமையா யவனுயி ரில்வாழ்க்கைத் துணையாகி
அருமையா யிருந்தவள் தேஹம்விட் டாவியம்மா !
மறுமைக்குச் சென்றதை நினைத்துமே தானழுவான்.

9. கண்ணீரை யவன்கையாற் சுண்டியெ றிந்துடன்
தண்ணீர்போ லவனுள்ளம் ததும்பியே பூரித்துத்
தண்ணீர்போ லிசைந்த பாத்திரத் துருவமையத்
தண்ணீர்போ லுருகிப்பின்கட்டியா' சுகதுக்கசமபாவம் கொண்டுழைப்பான்.

10. உழைப்ப உழைத்துப்பின் உண்ப வுண்டு
உழைப்பினால் வினைகளை மாற்றுமோர் சுகநித்ரையில்
உழைப்ப உழைக்கவென் றவன்தானும் பின்னெழுந்து
உழைப்பினால் உழைப்பில்லாச் சாந்தனா யானான்பாரே !

11. தொல்லுலகி லடியேனும் கருமானே ! யுனைப்போலவே,
கொல்லுலைக்கூடத்திற் கரும்பொன் னுருவமையச் செய்யுமாபோல்,
வல்லுலகில் வன்னெஞ்சர் செய்துன்பை இன்பாக்கித்
தொல்லுலகிற் கருமஞ்செய் வழியறிந்தேன் பெருமானே !

12. துதியுனக்கா இப்பாவை இளஞ்சேயு முனைப்பார்த்து
விதியறிந்து பிழைக்கவென்றே இயற்றினேனான் கருமானே !
மதியிருந்தால் கதியறிந்து பிழைக்கலாமென் றெவ்வுயிர்க்கும்
கதியளிக்குங் கர்மவழிகாட்டியோனே ! கருமஞ்செய் பெருமானே !

(1) கொல்லை. கொல்லுலை.

## BEWARE OF EVIL HABITS.

### கெட்ட பழக்கங்களை முளையிலே பிடிங்கிவிடவேண்டும்.

கெட்ட பழக்கங்களும், நாட்டங்களும் எத்தனையோ சுளுவாய் மனிதனுடைய உள்ளத்தில் நுழைந்து வேரூன்றின பின்னர் அம்மனிதனுக்கு நல்லுணர்வு பிறந்து அவற்றை வேரோடு பிடிங்கி நல்லெண்ணங்களை நாட்ட அளவிறந்த அவாக்கொண்டவனாயிருப்பினும் சாதாரணமாய் அது கூடாத காரியமாகவே போவது அனுபவ சித்தியால் யாவரும் அறிந்த விஷயமே.

முன்னொரு காலத்தில் வசந்தபுரமென்னும் ஊரில் ஏழைத் தையற்காரனொருவன் கடைவீதியில் ஓர் வீட்டில் சிற்றறை யொன்றை குடிக்கூலிக்கு அமர்த்தி அதிலிருந்து தையல் தைத்து வரும் ஊழியத்தால் கவலையின்றி காலக்ஷேபஞ்செய்து வந்தான். இவ்வாறிருக்கையில் ஓர்நாள் அவ்வூர் அரண்மனை யானைகளிலொன்று பாகனைமீறி தெருத்தெருவாய் அலைந்துதிரிந்து கடைசியில் நமது தையற்காரனிருந்த கடைவீதி வழியே உலாவ ஆரம்பித்தது. ஒவ்வோர் கடையிலும் திறந்திருந்த பலகணியின் வழியாய் தன் துதிக்கையை நீட்டிப்பார்க்கவே கடைக்காரர் உடனே அதை அடித்துத் துரத்திப் பலகணியின் வாயிலைச் சாத்தினார்கள். இவ்வாறு துரத்தப்பட்ட யானையோ சற்றும் மனஞ்சலியாமல் அவ்வீதியிலேயே நடமாடிக் கொண்டிருந்து, நமது தையற்காரனுடைய சிற்றறைக் கதவு திறந்திருப்பதைக் கண்டு வெளியில் நின்று வழக்கம்போல தன் துதிக்கையை உள்ளே நீட்டினது. தையற்காரன் வேலையில் கருத்தாயிருந்ததனாலோ வேறென்ன முகாந்தரத்தாலோ அதை சற்றும் கவனிக்கவில்லை. ஆகவே யானை சற்று தைரியங்கொண்டு ஓர் அடிமுன் வைத்து முறம்போல விரிந்தகன்ற தன்னிரு காதுகளையும் அசைத்து, முகத்தை முற்றிலும் உள்ளேவிட்டு தன் சிறு கண்களால் சிற்றறையை சுற்றுமுற்றும் பார்த்து ஆராய்ச்சிசெய்தது. தையற்காரன் இந்த தடவை யானையைக் கண்டாலும் அது தனக்கோர் தீங்கும் விளைக்காது, சற்றுநேரத்துக்குள் தன்வழியே போய்விடுமென்றெண்ணி சும்மாவிருந்தான். இதைக்கண்ட அம்மிருகம் அதிக தைரியம் படைத்து முதலில் ஒருகாலும், பின் மற்றொரு காலும், பின்னர் தன்னுடலமும், தன் பின்னங்கால்களும் வாலுமாக தன் அவயவத்தை ஒவ்வொன்றாய் வெகு சுலபமாக உட்செலுத்தி அறைக்குள் சந்தோஷத்துடன் நுழைந்துவிட்டது. அதுவரையில் அசட்டையாயிருந்த தையற்காரன் இப்போது அம்மிருகத்தை வெளியில் துரத்த எத்தனித்தான். மூர்க்ககுணமுள்ள அந்தப்பிராணி ஏழைமனிதனுக்குக் கிஞ்சித்தும் பயப்படாமல் அவனையெதிர்க்கத் தலைப்பட்டது. தையற்காரனுடைய அறை வெகு நெருக்கமாயிருந்தபடியாலும், யானை மதங்கொண்டதாகத் தோன்றினபடியாலும் அதையெதிர்த்து வெல்ல தன்னாலாகாதென்று கண்டு தையற்காரன் தன் கடையைவிட்டு தப்பிப் பிழைத்தோடும்படி நேரிட்டது—என்று ஒரு கதையுண்டு.

இவ்வண்ணமே அநேக துர்ப்பழக்கங்கள் சிறுவரிடத்தில் சுலபமாய் போய்ச்சேர்ந்து வேரூன்றி, பின்னர் அவர்களை வெகுவாய் பீடிக்கின்றன. பிறகு அவர்கள் இவற்றாலுண்டாகும்திரவிய நஷ்டத்தையோ, தேகஅசௌக்கியத்தையோ, மானக்குறைவையோ நன்குணர்ந்து, தங்களை யிறுக்கக் கட்டியிருக்கும் தளைகளாகிய துர்ப்பழக்கங்களை அறுத்தெறிய வெண்ணி என்ன முயற்சி செய்தும் பலிக்காமல் தாங்கள் முதலில் விளையாட்டுப்போலிடங் கொடுத்த வினைகளுக்கு அடிமைகளாகி மடிகிறார்கள். தையற்காரனைப்போல் விவேகமற்றவரிவரே. இப்போது புகைச்சுருட்டு உபயோகிக்கும் பெரியவர்களில் எத்தனையோ பெயர் சிறுவயதில் சிநேகிதர் இப்படி குடிக்கிறார்களே நாமும் குடிப்பதால் மோசமென்னவென்று தொடங்கிய பழக்கமதுவென்று ஒப்புக்கொள்வார்கள். இத்தன்மையாகவே கட்குடித்தல், சூதாடல், கொள்ளைவிரும்பல் ஆகிய வெவ்வேறு விஷப்பழக்கங்கள் இளவயதிலே இலகுவாய் வந்தடைந்து வருத்துவனவாதலின் துர்ச்செய்கையென்று கண்டவுடன் தையற்காரனைப்போலிராமல், மற்றக் கடைக்காரரைக் கண்டுபாவித்து, அவற்றைவிட்டகன்று, உங்களுள்ளத்தின் கதவை யிறுக சாத்துவீராயின் என்றும் சுகமடைவீர்.

## A VIEW OF THE ANCIENT HISTORY OF EGYPT.

## எகிப்துதேசத்தின் பூர்வீக சரித்திர சங்கிரகம்.

முற்காலத்தில் எகிப்து தேசம் நமது ஆசியாகண்டத்தின் ஒரு பகுதியாக விருந்தமையாலும், அதன் அரசாட்சி, சங்கங்கள், நடை, உடைபாவனைகள் எல்லாம் ஒருவாறு கீழ்நாட்டாரை ஒத்திருந்தமையாலும், அதன் பூர்வசரித்திரம் இன்னதென சற்று கவனிப்போம். இத்தேசம் ஆப்பிரிவிக்காவிலுள்ள நீலநதி பாயப்பெற்று நீர்வளம், நிலவளம் உடைய ஓர் படுகையைப் போன்றது. வடக்கில் மத்தியதரைக்கடலும், தெற்கே பில்லித்தீவும், யானைத்தீவுகளும், அதன் எல்லைகளாம். இவ்விரண்டு தீவுகளில் பூனையும், யானைகளும் இருந்ததால் இப்பெயர் வாய்ந்ததெனக் கொள்ளலாம். முன்னோர்கள் இந்நகரத்திற்கு க்ஷேமி நகர் எனப்பெயரிட்டிருக்கிறார்கள். கிறிஸ்தவர் ப்ராசீன வேதபுஸ்தகத்தில் மிஸ்ரமபுரி (Mizraim) என்று இதற்கு ஒரு நாமமுண்டு. நீலநதி ஒன்றே இத்தேசத்து ஜனங்களுக்கு முக்கிய ஆதாரமாயுள்ளது. பிரதி வருடமும் இந்நதி பெருக்கெடுத்து வருவதைப்பற்றி குடிகள் தங்கள் இல்லங்களை உயர்த்திக் கட்டிக்கொண்டார்கள். மழை யில்லாக்காலங்களில் ஆற்று வெள்ளத்தின் மிகுதியை பள்ளத்தாக்குகளிலும், ஏரி, குளங்களிலும் தேக்கிக்கொள்வதால் தண்ணீர்க் குறைவே கிடையாது. ஆனதுபற்றி வெகு காலத்திற்குப்பிறகு இதைக் கைப்பற்றிக்கொண்ட உரோமஜாதியார் இதை தானியக் களஞ்சியமெனக் கொண்டாடினார்கள். ஆற்றின் பெருக்கால் அனேக புலங்கள் மூடப்பட்டுப்போம். அப்போது தண்ணீரை வாய்க்காலின் வழியாய் விட்டுக்கொண்டு மேட்டுப்பிரதேசங்களை சாகுபடி செய்துகொண்டார்கள். அந்நிய தேசங்களாகிய ஆபிசீனியா, இதியோபியா, மலை செறிந்தவைகளாதலாலும், பிரசண்ட குளிர்காற்றுவந்து மோதுவதாலும் ஆற்றின் வெள்ளத்திற்குக் காரணமாகும். இதைப்போல நீர்வளமுள்ள நாடு உலகிலெங்குமில்லை. இதைக்கொண்டே ஜனங்கள் செருக்குற்று கவலையின்றிக் காலங்கழித்தனர். இந்தப் பிரவாகத்திற்குப் பபங்தே அருகாமையிலுள்ள மலைகளினின்று வெட்டி எடுக்கப்பட்ட கருங்கற்பாறைகளால் கட்டப்பட்ட கட்டடங்களில் வசித்தார்கள். இத்தேசத்தின் பெருமையையும், ஜனங்களின் ஊக்கத்தையும் வியந்து அன்னிய நாட்டாராகிய கிரேக்கர் கி. மு. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் வந்து சில வருடங்கள் இருந்ததாகத் தெரிகின்றது. ஆனால் ஜனங்களின் தன்மையும், நடை, உடைபாவனையும் வேறெந்த நாட்டாரோடும் சம்பந்தப்படாமல் அற்புதமானவைகளாய் இருந்தன. ஏனெனில் தங்கள் நாடுதான் தாய் நகர் என்றும், தாங்கள்தான் இம்மாநிலத்து மூலபுருஷரெனவும் எண்ணங் கொண்டிருந்தார்கள். அவர்கள் பாஷையினின்றும் கற்கம்பங்களிலுள்ளவைகளினின்றும் இன்ன வகுப்பு ஜனங்களெனச் சிறிது புலப்படுகிறது. எகிப்து தேசத்திலுள்ள கிறிஸ்தவர்கள் தற்காலத்தில் பேசிக்கொண்டிருக்கும் காபதீக பாஷையானது தங்கள் முன்னோர்களின் தேவபாஷையாக விருந்ததாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். சமஸ்கிருத பாஷையை இந்துக்களும், லத்தீன் பாஷையை உரோமஜாதியாரும் எவ்வாறு மதிக்கின்றாரோ அவ்வாறே முற்காலத்தில் எகிப்தியர்கள் காபதீக பாஷையை மதித்திருந்தார்கள். இந்த பாஷையைக் கொண்டு 'செமிடிக்' * வம்சத்தைச் சேர்ந்தவர்களெனச் சொல்ல சற்று இடமுண்டேனும், இந்தியா, ஐரோப்பா வம்சத்தாரென சொல்ல இடமில்லை. அவர்கள் தங்களைப்பற்றி கற்சிலைகளிலும் பிரேதங்களை சுகந்தமிட்டு காப்பாற்றப்பட்டுவந்த கற்பேழைகளின் மீதும் எழுதிவைத்திருக்கும் சங்கதிகளை ஆராயுங்கால் பற்பல ஜாதியார் கலந்த ஒரு மிஸ்ரமவகுப்பா

* Semitic Race.

ரெனத் தோற்றுகின்றது. இந்தக் காரணத்தாலேயே அவர்கள் தேயத்திற்கு மிஸ்ரமபுரி என்று பெயர் வந்திருக்கலாம். அவர்கள் உயர்குலத்தோர், இழிகுலத்தோர் என இருவகையாய்ப் பிரிந்திருந்தார்கள். பார்வைக்கு சுந்தரமாயும் கல்விப்பயிற்சியடைந்து விவேகம் பூரணமாயுள்ளவர்கள் மேலான வகுப்புக்குரியவர்களென்றும், அந்நிய தேசத்தாரோடு சம்பந்தஞ்செய்துகொண்டு பொலிவிழந்து சிறிது அவலக்ஷணமாக கருமேனி யுடையவர்கள் இழிகுலத்தாரெனவும் விளங்குகின்றது. இவர்கள் ஆசாரம், உடை, பாவனைகள் எல்லாம் ஒருவாறு நமது பூர்வீக இந்தியாவின் ஆரியர்களின் ஆசாரத்தை ஒத்திருத்தலின் இவர்களுடைய செல்வாக்கு வெகுதூரம் பரவி இருக்க வேண்டுமென்றே தோற்றுகின்றது. மேலும் இத்தேசத்தார் முகச்சாயல் ஆசியரின் முகச்சாயலை ஒத்திருந்தது. எகிப்து தேசத்தின் உத்தரபாகம் இதியோபியா வென்றும், தட்சணபாகம் மேருவென்றும் வழங்கிவந்தன. இங்கே குருக்களென்ற மேற்சாதிதான் அரசாண்டு இதை ஓர் திலகம்போல் துலங்கும்படி செய்தனர். அரசனை தாங்களே தெரிந்தெடுத்துக்கொண்டு நீதி தவறாது ஆண்டுவருகிறானென்று பார்த்துவந்ததும்தவிர கொடுங்கோன்மை செய்யத்தலைப்பட்டால் அவன் தன் உயிரை மாய்த்துக்கொள்ளும் வகையையும் தேடி இருந்தனர். இது ஓர் பெரிய வாணிபஞ்செய்யு மிடமாயுமிருந்தது. அரேபியா, இந்தியா முதலிய அன்னிய தேசங்களுக்கு தங்கள் சரக்குகளை படகிலாவது, ஒட்டகங்களின் மீதாவது ஏற்றிக்கொண்டுபோய் வியாபாரஞ்செய்து வந்தார்கள். இதனால் இந்தியா ஜனங்கள் போக்கு வரவுசெய்து தங்கள் ஆசாரங்களையும் ஒருவாறு கற்பித்திருக்கலாமென ஊகிக்கலாம். சிலர் இத்யோபியாவினின்று தான் இத்தேசம் நாகரிகமடைந்த தெனச் சொல்லுகிறார்கள். இந்தியாவைப் போலவே எகிப்துதேசத்தைப்பற்றி ஒரு சுதேசியாவது எழுதவில்லை. என்றாலும் கிரேக்கர் எழுதிவைத்திருக்கும் சரித்திரங்களாலும் கிறுஸ்தவர் ப்ராசீன வேதபுஸ்தகத்தாலும், சிற்பிகள் தங்கள் முழுவல்லமையுங்காட்டி கட்டியிருக்கும் சித்திரகற்சிலைகள், கல்லறைகள் இவைகளில் செதுக்கியிருக்கும் ஒருவித சங்கேத தேவபாஷையாலும் எகிப்தியரின் வரலாறு சிறிது புலப்படுகின்றது. பிரான்ஸ் தேசத்து பிரசித்திபெற்ற மன்னவனான நெபோலியன் படையெடுத்து இந்த அற்புதங்களைக் கண்ணுற்று வெளியிட்டபிறகு தான் ஏனையோர்கள் சிரத்தை எடுத்துக்கொண்டு சங்கதிகளை நன்றாய் ஆராய்ந்தறியவேண்டுமென்கிற ஊக்கங்கொண்டார்கள். நீலநதி பாயும் தீர வாசமாகிய திபேயா பூர்வ இராஜதானி. இதில் பிரயாணிகள் கண்ணைக்கவர்ந்து விழித்தகண் விழித்தபடிபார்த்து பிரமித்து நிற்கும்வண்ணம் அளவற்ற கல்மண்டபங்கள், ஸ்தூபிகள், விசித்திரமான வேலைப்பாடமைந்த சுகந்த மிட்டு அடக்கஞ்செய்திருக்கும் பிரேதக்கல்லறைகள் நிறைந்திருந்தன. கொஞ்ச மையில் தூரத்தில் கர்ணகேச, இலக்ஷேசர (Karnak and Luxor) என்று பெயர்படைத்த இரண்டு கோவில்கள் கருங்கற்பாரைகளால் கட்டப்பட்டிருக்கின்றன. இவைபோன்ற கோவில்கள் உலகில் எங்குமில்லை. கர்ணகேசகோவில் மண்டபத்தில் இருபக்கத்திலும் அதி உன்னதமான கற்சிலைகள் கைதேர்ந்த சிற்பிகளும், கொத்துவேலைக்காரரும் பார்த்து இதுவும்மனிதரால்தான் அமைக்கப்பட்டதோ வென ஐயுறும்படி இருந்தன. நூற்றுக்கணக்கான கற்றூண்கள் நிறுத்தப்பட்டிருந்தன. அவற்றின் மையத்தில் அமைந்துள்ள பன்னிரண்டு தூண்கள் ஒவ்வொன்றும் 6 பேர் சேர்ந்து கட்டித் தழுவினாலும் தழுவமுடியாத சுற்றளவுள்ளதும், இரண்டு பனைமரம் உயரமுள்ளதும் அவற்றின் ஒவ்வொன்றின் உச்சியில் ஏறக்குறைய நூறுபேர் ஏறி நிற்க இடமிருந்ததென்றால் அதன் பரிமாணத்தை நீங்களே கவனித்துக்கொள்ளுங்கள். நீல நதியின் மேற்குக் கரையில் "விக்ரஹபிரதேசம்" என்ற ஒரு சிங்

கார இடமுண்டு. இதில் முன்னால் வைத்திருக்கும் இரண்டு சிலைகள் ஒவ்வொன்றும் ஏறக்குறைய இரண்டு பனைமரம் உயரமுள்ளது. இதில் ஒன்று அருணோதயமானதும் ஒரு இனிமையான பேரிசைக்கூச்சல் முன்பு போட்டுக்கொண்டிருந்ததாம். இந்த கோவில்களிலேயே இராஜாக்களின் கொலுமண்டபங்களுமிருந்தன. தேவிஸ் இராஜதானி முதற்கொண்டு ஐந்து மையில் தூரம் பூமியைச் சுரங்க மிட்டுக்கட்டிய கல்லறைகள் பல உள. இவற்றால் அக்காலத்தவரின் சரித்திரம், இல்லற வாழ்க்கை, ஜீவனோபாயங்கள், மரணாந்தரம் ஒருவன் படும் அவஸ்தைகள், எல்லாம் வெளியாகின்றன. இவ்வெழுத்துக்களைப் பார்த்தால் இன்றுதான் எழுதியதோ வென அவ்வளவு சுத்தமாயிருக்கின்றன. கிரேக்கர் எழுதி வைத்திருக்கும் சில நூல்களும் இச்சுரங்கங்களில் கிடைத்தன. தனவான்களுக்கும் ஏழைகளுக்கும் யாதொரு வேற்றுமையின்றி கல்லறைகள் சமைக்கப்பட்டன. இவை எல்லாம் கி. மு. ஆயிர வருடங்களுக்குமுன்பே சமைக்கப்பட்டன வென்றால் இவர்கள் சிற்பவேலையில் பயிற்சியடைந்தகாலம் இதற்கு முன்னரே இருந்திருக்கவேண்டுமென ஊகிக்கலாம். இவைகள் ஏற்பட்ட காலம் அறியவேண்டுமென அன்னியதேயத்து வித்வான்கள் பலவாறு முயன்றபோதிலும் முன்பு சாத்தியப்படாமல்போயிற்று. சென்ற நூற்றாண்டில் சங்கேத தேவபாஷையை மொழிபெயர்க்கும் வகையை கண்டுபிடித்தார்கள். பிரான்சுக்காரரோ செட்டாநகரத்தில் கண்டு எடுத்த ஒரு கற்சிலையில் மூன்று பாஷைகளில் சிலவற்றை எழுதக்கண்டார்கள். அந்த கற்சிலை லந்தன்மா நகரத்து விநோதக்காட்சி மண்டபத்தில் இன்னுமிருக்கின்றது. Dr. Young என்ற ஒரு சிறந்த பண்டிதர் இதில் எழுதியதை வாசித்தறிந்து கி. மு. 200 வருடங்களுக்குமுன்பு அது எழுதியதென்றும், அகன் சங்கேதபாஷை சில அறிகுறிகளாலும், ஒலி வேற்றுமையாலுந்தான் உணரத்தக்க தென்றும் சொல்லியிருக்கிறார். இந்த ஆதாரத்தைக் கொண்டே பிரான்சுதேசத்துப் புலவர் 'சம்போலியன்' என்பவர் இவற்றை செவ்வையாய் வாசித்து பொருள் உணரும் வழியைகண்டு பிடித்தார். பரிசோதித்துப் பார்த்தளவில் இக்கற்சிலைகளைக் கட்டின அரசர்களின் வரலாறும், பாவலர்கள் இவர்களைப்பற்றிப் புகழ்ந்து பாடிய பாக்களுமேயல்லாமல் சமயநூலாவது, சாஸ்திரங்களாவது, சரித்திரமாவது அவற்றில் எழுதக்காணோம். என்றாலும் இவற்றால் அரசாண்ட மன்னர்களின் பெயரும், காலமும், வெற்றிகளும் நன்கு விளங்குகின்றன. பூர்வத்தில் எகிப்து தேசத்தில் நமது தேசத்தைப் போலவே வர்ணாச்ரம தர்மங்கள் ஏற்பட்டு பிரபலமாயிருந்தன. சரித்தரக்காரர்களில் Strabo என்பவர் இவர்களை ஆசாரியர், பொருநர் என்றும், Diodorus என்பவர் யாதவர், வைசியர், சிற்பிகள் என்றும், Herodotus என்பவர் யாதவர், பண்டிதர், வைசியர், மாலுமிகள், வராகபாலர் (பன்றி ஒட்டர்கள்) என்ற 5-ஜாதியாராகவும் பிரித்திருந்தபோதிலும் ஆசாரியர், பொருநர் தான் மேலான வகுப்பாரெனச் சொல்லுகிறார்கள். ஆகவே இந்தியாவின் வருணபேதத்தை நன்றாய் ஒத்திருக்கிறதெனத்தெளிவாகின்றது. மேற்சொன்ன மேல் வகுப்பார்தான் சிம்மாசனாதிபர்களாயிருந்தனர். பொருநரில் எவனாவது அரசனாக நேமிக்கப்பட்டால் அவனை ஆசாரிய கருமங்களைச் செய்ய யோக்யனாக்க ஓர்வித சடங்கை ஏற்படுத்தியிருந்தார்கள். அரசன் அதிகாரத்திற்கு எல்லை இல்லை. சனங்கள் அவனை தெய்வமாகக்கருதி மேன்மை பாராட்டினார்கள். அரசனும் அனுசரிக்கவேண்டிய பலவித கிரப்பந்தங்களுக்குள் முக்கியமாய் அவன் இன்ன காலக்ஷேபந்தான் செய்யவேண்டுமென்றும், இன்னதுதான் புசிக்க வேண்டுமென்றும் விதி கண்டிப்பாய் இருந்தது. ஆசாரியர்கள் மந்திரியாக இருந்துகொண்டு கொடுங்கோன்மை இயற்றாமல் அரசாளச்செய்து வந்தனர். இதனால் மேல்வகுப்பாருள் சிற்சில சமயங்

களில் மனஸ்தாபங்கள் உண்டாயிற்று. ஆசாரியர்களுக்குள் ஏற்றத்தாழ்வு உண்டு. பெரிய தேவஸ்தானதிபர்களுக்கு சில்லரை தேவஸ்தானதிபர்களைக் காட்டிலும் மரியாதை அதிகம். படித்தவர்கள் இவர்களாதலின் பற்பல தொழிலைச்செய்து வந்தார்கள். ஆதலின் சர்க்கார் உத்யோகஸ்தர், வக்கீல்கள், வித்வான்கள், வைத்தியர்கள், சிற்பிகள், முதலானவர்களாயிருந்து வேலைபார்த்தவரும் இவர்களே. இவர்கள் மிதமாய் புசிக்கவும், குடிக்கவும் வேண்டுமென்றும் ஒரேதாரத்தைத்தான் மணம் புரியவேண்டுமென்றும் விதி உண்டு. இதனால் ஏனையோர்கள் பல பெண்களை விவாகஞ் செய்துகொண்டதாகத் தெரிகின்றது. மேல்வகுப்பாருக்கு மானியங்கள் விடப்பட்டதுமல்லாமல் சர்க்கார் செலவிலேயே அன்னபானதிகள் நடந்தேறிவந்தன. சுமார் 4,10,000 பேர் அடங்கிய காப்புச் சேனையில் உள்ள பல பொருநர்களுக்கும் மானியங்கள் ஏற்பட்டிருந்தன. போர்த்தொழிலை விசேஷமாய்ப் பயின்று அதில் மிக்க வல்லவராயிருந்தனர். அன்னியதேசத்தாரோடு சண்டைசெய்து தங்கள் தேசத்தைப் பலமுறை பாதுகாத்த அரசர்களின் வெற்றியைக்குறித்துப் புகழ்ந்திருக்கிறார்கள். பெண்பாலாரும் அரசுபுரிந்து கீர்த்தியடைந்திருந்தனர். முற்றுகைப்போட்டு ஒரு பட்டணத்தை பிடிப்பதில் இவர்கள் செய்யும் சாகசங்கள் மிக விநோதமெனத் தெரிகின்றது. முக்கியமாய் குருக்கள் என்ற ஜாதிதான் அரசுபுரிந்து வந்தனர். முன்பு எகிப்து கடவுளாலும், பிறகு தேவதைகளாலும் அதற்குப் பிறகுதான் மனிதர்களால் அரசாளப்பட்டதென எண்ணங்கொண்டிருந்தார்கள். மரணதண்டனையானது கொலைசெய்தவர்கள், பொய்ச் சத்தியம் பண்ணினவர், புரட்டுருட்டுச் செய்தவர்கள், அக்கிரமமான வாணிபஞ்செய்தவர்கள், ஆகிய இவர்கள்மேல் விதிக்கப்பட்டிருந்தது. பயங்காளிகளையும், யுத்தத்தில் முதுகுகாட்டி ஓடினவர்களையும் மிகவும் அவமதித்து இகழ்ந்தார்கள், அந்நியதேசத்தார் இங்கேவந்து வியாபாரம் செய்தார்களே ஒழிய தாங்கள் வெளியூர்களுக்குப் போகவில்லை. திபேயாநகரத்தில் சீனதேசத்துப் பாத்திரங்கள் இருந்ததற்கு அந்த பாஷையிலேயே எழுதின கற்கம்பங்கள் சில உள. பிரதேசத்தாரைச் சிறிதும் மதிக்காமற்போனதற்குக் காரணம் அவர்களுடைய விசித்திரமான நடவடிக்கைகளும், கோட்பாடுகளும், பலவித நிர்ப்பந்தங்களுமென ஊகிக்கலாம். வேளாண்மை, ஆடுமாடு மேய்த்தல், அம்பும் வில்லுமாய் வேட்டையாடுதல், மீன் பறவை முதலியவைகளைப்பிடித்தல், தச்சுவேலை, சிற்பவேலை, தட்டாரவேலை, நெசவு தொழில், சித்திரமெழுதல், இன்னும் இவைபோன்ற பலவித தொழில்களைச் செய்ததாக கற்கம்பங்களில் வெகு விசித்திரமாய் காட்டப்பட்டிருக்கின்றனவே ஒழிய வேறேதாவது பழைய கிரந்தங்கள் உண்டோவென்று சந்தேகிக்க இடம் காணோம். நீல நதிக்கரையில் நாணலைப் போன்ற ஓர் வகைச்செடி அபரிமிதமாய் வளர்ந்திருந்தன. அதன் கிழங்கை விறகாகவும், இலைகளை காகிதங்களாகவும் உபயோகித்தார்கள். இரசாயனசாஸ்திரம் சிறிதளவு தெரிந்திருந்தது. இவற்றையெல்லாம் பார்க்குமளவில் நாகரிகத்தில் சிறந்தவர் எனக் கொள்ளல்வேண்டும். தர்பார் மண்டபங்களில் அனைவரும் தங்கள் பெண்பாலரோடு சேர்ந்து, நாட்டியப் பெண்களை நடனமாடச்செய்தும், வித்வான்களை வரவழைத்து பாட்டுக்கச்சேரி வைத்தும் உல்லாசமாய்க் காலங்கழிப்பதும் உண்டு. மதுபானம்செய்யும் வழக்கமும் இவரிடம் இருந்தது. மனிதரின் ஆயுள் சொற்பமென்றும், ஆதலால் உலக இன்பங்களை ஒருவன் அனுபவிக்கவேண்டுமென்றும் வற்புறுத்தும்பொருட்டு ஒரு பிணத்தின் தலையை கூடியிருக்கும் அதிதிகளுக்குக் காண்பிப்பது வழக்கம். கடவுள் ஆராதனையின்றி ஒரு காரியமும்செய்யத் தொடங்குகிறதில்லை. அவர்கள் பிருதுவியை வணங்கினார்கள். மிருகஜாதிகளில் மிகவும் உபயோகமுள்ளவைகளைத்தான்

தெய்வமாக பாவித்துப் போற்றிவந்தார்கள். அமரேசன் என்ற இந்துக்கள் தெய்வம்போல 'அமன்' என்ற ஒரு தெய்வத்தையும் நம் பிதா மகனைப்போன்ற பிதா வென்ற தெய்வத்தையும் வணங்கினார்கள். எருது, நாய், பூனை, வல்லூறு இவற்றை எகிப்திலும், தீபேயா நகரத்தில் ஆட்டையும், மெந்திய நகரத்தில் வெள்ளாட்டையும், இலகூதபோலியில் ஓநாயையும், இலை யாண்டோபோலியில் சிங்கத்தையும், அத்ரிபேசாவில் சுண்டெலியையும் வணங்கிவந்தார்கள். யாராவது இவற்றைத் தெரிந்து கொன்றால் மாணதண்டனைக் காளாவார்கள். தற்செயலாய் இவைகளைக்கொன்றால் ஒரு பெரிய அபராதம் கொடுத்துத் தப்பலாம். ஒரு பட்டணத்தில் வணங்கிவரும் மிருகங்களை வேறொரு பட்டணத்தில் வசிப்போர் மதிக்காமலும் இருப்பார்கள். இதனால் கலகங்களும் உண்டாவது உண்டு. உரோம, கிரேக்க ஜாதியார் அரசாண்டகாலத்திலும் ஜனங்கள் இந்த வழக்கத்தை விடாமல் இருந்ததினால் அவர்கள் இதை கேலிக்கிடமாக வைத்திருந்தார்கள். ஒரு வீட்டில் ஒரு பூனை இறந்துபோனால் அதில் உள்ளவர்களெல்லாம் தங்கள் புருவங்களை சிரைத்துக்கொள்ள வேண்டுமென்றும், ஒரு நாய் செத்துப்போனால் அவர்கள் சர்வாங்கக்ஷவரம் செய்துகொள்ளவேண்டுமென்றும் கண்டிப்பான ஏற்பாடு இருந்தது. இதைக் கேட்க யார்தான் நகையார்கள். மேலும் இச் சவங்களை வாசனைப்பெட்டிகளில்வைத்து மனிதர்களைப்போலவே கல்லறைகளில் வைப்பதுண்டு. மிருகங்களில் நந்திகேஸ்வரனைப் போன்ற ஒருவகை இடபத்தை (எருதை) ஆராதித்தார்கள். இவ்வெருது கருப்பாயும், நெற்றியில் முக்கோணவடிவுள்ள வெள்ளைப் புள்ளியுடையதாயும், கழுத்து கழுதுபோலவும், இருந்தால்தான் பூஜைக்கருகமென்றும், அதை வளர்த்துவரும் பூசாரிக்கு ஆருடஞ் சொல்லும் சக்தி தானாகவே அமையுமென்றும் நம்பியிருந்தனர். இந்த எருதை 25-வருடங்களுக்குமேல் வைக்கிறதில்லை. அதற்குள் இறந்துபோனால் அவ்வூராரெல்லாம் பிணக் கோலங்கொண்டு மயானம் குறுகி உத்தரக்கிரியைகளை வெகு ஆடம்பரத்துடன் நடத்திவந்தார்கள். மேற்சொன்ன அடையாளங்களமைந்த வேறொரு எருது கிடைக்கிறவரையில் ஒப்பாரியிட்டு தினமும் அழுவார்கள். அது அகப்பட்டதும் அடக்கமுடியா ஆனந்தங்கொள்வார்கள். செத்த எருதின் ஆவி இதனுள் பிரவேசிக்கிறதாக நம்பினார்கள். இதனால் மறுஜன்மம் உண்டென்று தோற்றுகின்றது. ஒருவன் மரித்தபிறகு அவனுக்கு அந்த மானிட ஜன்மமே வரவேண்டுமானால் மூவாயிரம் வருடம் தரை, கடல், ஆகாயம், இவற்றில் வசிக்கும் பலவித ஜீவராசிக்குள் பிறந்துழலவேண்டுமென்று, ஒரு கிரேக்க சரித்திரக்காரர் சொல்லியிருக்கிறார். யமபுரம் போல அவர்கட்கும் யமந்தி (Amenthi) என்ற ஓர்பட்டணமும் அங்கே குற்றத்திற்குத் தக்கவாறு தண்டனை விதிக்கப்படுகிறதென்றும் நம்பிக்கையுண்டு. ஒரு கற்சிலையில் யமன் ஒரு கையில் திராசுத்தட்டுகளை ஏந்தி தீர்ப்புச் சொல்லுகிறதாகக் காட்டியிருக்கிறது. ஒருவன் இறந்துபோனாலும் அவனை பிரதிவாதியாகச் சேர்த்து பிராதுசெய்யலாம். இறந்துபோனவன் ஒரு குற்றவாளியாக ஏற்பட்டால் அவனுக்கு யாதொரு உத்தரக்கிரியைகளை நடத்தக்கூடாதென்றும் இவ்வளவுகாலம் அச்சவத்தை புதைக்கக்கூடாதென்றும், விதி இருந்தது. இதனால் அரசர்கள் கொடுங்கோன்மை புரியாமல் செவ்வையாய் அரசாண்டதற்கு ஒரு காரணமாகும். இத்தேயத்தவர்கள் கல்லறை சமைப்பதில் தங்கள் அந்தஸ்துக்கு மீறியே செலவுசெய்தார்கள். இதற்கு இடையூறு ஏதேனும் நேர்ந்தால் அதை ஒரு கெட்டசகுனமாக எண்ணிப் பரதவிப்பார்கள். பிணத்தை ஆடையாபரணங்களால் அலங்கரித்து ஒரு பெட்டிக்குள்வைத்து அதன்மேல் தங்கள் தேவபாஷையில் அதைப்பற்றி சிறப்பித்து சிலவற்றை எழுதுவதுண்டு. இவ்வாறு செய்தால்தான் ஆன்மா மரிக்கிறதில்லையென

நம்பினார்கள். இந்துக்களுக்கு சாரதா என்ற தெய்வம் படிப்புக்கு எவ்வாறோ அவ்வாறே இவர்களுக்கு 'தாத்' என்ற தெய்வம் வழங்கிற்று. இந்த தெய்வம் கணிதம், க்ஷேத்திர கணிதம் (Geometry) வான சாஸ்திரம், லிபி சாஸ்திரம், இவற்றைக் கற்பித்துப்போனதாக எண்ணினார்கள். ஆற்றின் வெள்ளத்தால் மண் மேடிட்டுப் புலங்களின் எல்லை அறிவது வருத்தம். அதனால் க்ஷேத்திர கணிதம், வானசாஸ்திரம் இவ்விரண்டையும் கற்கவேண்டியது அவசியமாயிருந்தது. எந்த வித்தையையும் அபிவிர்த்திசெய்யாமல் பூர்வ ஸ்திதியிலேயே வைத்துக் காப்பாற்றினார்கள். தங்கள் வைத்திய நூலில் சொல்லியிராத ஏதாவதொரு விஷயத்தை ஒருவன் பிறதேயத்தாரிடம் பயின்று அதை ஒரு நோயாளிக்கு உபயோகித்து அதனால் அவன் இறந்துபோனால் வைத்தியனையும் மரணதண்டனைக்கு ஆளாக்கினார்கள். லிபி சாஸ்திரத்தை இவர்கள்தான் முதலில் கண்டுபிடித்தார்கள். ஏனெனில் பூர்வீக ஹிப்ரு, பினீஷியன், பாஷைகளின் எழுத்துக்கள் இந்த ஆதாரத்தைக்கொண்டே கண்டுபிடிக்கப்பட்டன. பிரசங்கம், செய்யுட்பாடம் என்பதே அவர்கள் அறியார்கள். சங்கீதவித்தையில் சிறிதுதான் தேர்ச்சியடைந்திருந்தார்கள். தம்பூர், வீணை, மிருதங்கம், கைத்தாளம் முதலியவற்றை உபயோகித்தார்கள். ஆனால் பிறநாட்டார் எக்காலத்தும் பார்த்து வியந்து பிரமிக்கும் வண்ணம் சிற்பவேலையிலும் சித்திர வேலையிலும், வெகு நிபுணராயிருந்தனரென்பது அவர்கள் கட்டிய அதி உன்னதமும், பிரம்மாண்டமுமான கற்சிலைகள், கற்கோபுரங்களைக்கொண்டே தெரிகின்றது. சிபிசக்கரவர்த்தி சுமார் 450-அடி உயரமும், அடிவாரத் தண்டை 716-அடி அகலமுமுள்ள ஒரு கோபுரத்தைக்கட்டி முடித்தார். இவ்வித உயரமான கட்டடங்கள் ஐரோப்பாவில் இருந்தபோதிலும் இத்தன்மையான பிரம்மாண்டபரிமாணத்தையுடையவைகள் கிடையா. இவற்றிற் பதித்துவைத்திருந்த பல வர்ணக்கற்களை அராபியர் பேர்த்துக்கொண்டு போய்விட்டதால் அதில் உள்ள சித்திரங்களும் அழிந்து போயிருக்கின்றன. இந்த கோபுரங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சமாதியிருக்க ஐரோப்பியர் கண்டதால் இவைகள் எல்லாம் முன்பு கல்லறைகளாகத்தான் இருந்திருக்கவேண்டுமெனச் சொல்லுகிறார்கள். இக்கட்டடங்களில் அமைக்கப்பட்ட மனித உருவங்களைக்காட்டிலும் மிருக உருவங்கள் மிகவும் நேர்த்தியாகவிருந்தன. தெய்வச் சிலைகளெல்லாம் மானிட சரீரமுடையதும் மிருகங்களின் முகமுடையதாகவும் இருந்தன. முக்கியமாய் செம்மறிக்கடா, வல்லூறு, எருது, இவைகளின் முகத்தைத்தான் தெய்வத்திற்கு அமைத்திருந்தார்கள். பெரிய விக்ரஹங்களுக்கு சிங்கத்தின் உடம்பும், மனிதரின்தலையு மிருந்தன. Herodotus, Diodorus என்ற கிரேக்க சரித்திர வித்வான்கள் தங்கள் தேசத்தைவிட்டு எகிப்து சரித்திரம் எழுத இங்கே சில வருடங்கள் இருந்து ஆசாரியர் மூலமாய் சங்கதிகள் தெரிந்து எழுதியிருந்தபோதிலும் ஒருவர் சொன்னபடி ஒருவர் சொல்லவில்லையெனத் தெரிகின்றது. 3-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் இத்தேசத்தை அரசாண்ட "டாலமி பிலடல்பஸ்" என்பவன் 'ஹெலியோ போலிஸில்' வசித்த "மானதி" என்ற ஒரு எகிப்து ஆசாரியப்புலவரை கிரேக்பாஷையில் ஒரு சரித்திரம் எழுதும்படி வேண்டிக்கொள்ளவே அவர் அதிக சிரத்தையுடன் எழுதாமற்போனபோதிலும், கற்கம்பங்களில் தேவபாஷையில் உள்ளவைகளை ஒப்பிட்டுப் பார்த்தளவில் இரண்டும் ஒத்திருந்தமையால் உண்மையெனவே கொள்ளல்வேண்டும். இவர் இந்த எகிப்து தேசம் கி. மு. 3892-ல் மனு (Menes) என்பவனால் நிர்மாணஞ் செய்யப்பட்டதெனச்

சொல்லியிருக்கிறார். இதில் முறையே பூர்விக ராஜாக்கள், பாரசீகர், கிரேக்கர், உரோமஜாதியார் அரசாண்டார்கள். இதில் ஆண்ட சுதேச ராஜாக்களில் சிலரைப்பற்றி எழுதுவோம். 'சிசார்த்தேசன்' என்ற ஒரு அரசன் ஆசியா, ஐரோப்பாவின்மேல் படையெடுத்து அவற்றைக் கைவசப்படுத்திக்கொண்டான். "திமேசன்" என்ற அரசன் காலத்தில் அராபியர் இந்த நாட்டை கைவசபப்படுத்தி, ஜனங்களை அடிமைகளாக்கி கோவில்களையும், பட்டணங்களையும், எரித்துவிட்டுப்போனார்கள். கி. மு. 712-ல் அரசாண்ட சேதாஸ் என்பவன் காலத்தில் Sennacrib (சென்னகிரிப்) என்ற ஆசிரியாதேசத்து பிரசித்திபெற்ற போர்வீரன் ஒருவன் படையெடுத்துவந்ததாயும், அவனை எதிர்க்கத் தன் சேனை உதவி செய்யாததால் சேதாஸ் இரவில் தான் கண்ட கனவின்படி வர்த்தகர்கள், தொழிலாளிகள், இன்னுமற்ற சாதாரண ஜனங்களைக்கொண்டு ஒரு சேனையைச்சேர்த்தான். ஆனால் தெய்வானுகூலத்தால் எதிரியின் அம்பு, வில், கேடயங்கள் முதலானவைகளை நடுசாமத்தில் சுண்டெலிகள் கூட்டமாய்வந்து தங்கள் பற்களால் கெடுத்துவிட்டுப்போனதால் 'சென்னகிரிப்' சேனை இருந்த இடந்தெரியாமல் மறுநாட் காலையில் சிதறிப்போயின. மேற்சொன்ன சுதேச ராஜாக்கள் ஆண்டபின எகிப்து தேசம் பாரசீகராலும், கிரேக்கராலும், உரோம ஜாதியாராலும் ஆளப்பட்டு வெகு நாகரிகமடைந்து முற்காலத்தில் உலகத்திற்கே ஒரு நடுநாயகமாக விளங்கிற்று.

## COAL.

### நிலக்கரி.

---

நிலக்கரி யென்பது அடுப்புக்கரிபோல ஒரு விதமான கரியேயாகும். ஆயினும் இது அடுப்புக்கரிபோலன்றிச் சிறிது இதர பதார்த்தங்களோடு கலந்திருக்கும். நெடுங்காலத்துக்குமுன்னே பூமிக்குள்ளே யாதோகாரணத்தினாற் புதைந்துபோன மரங்களும் செடிகளுமே இப்போது நிலக்கரியாகக் காணப்படுகின்றன. இது பூமிக்குள் மிகவும் படைபடையாக ஒன்றன்மேலொன்றாய் அமைந்திருக்கும்.

நிலக்கரி, மரங்களும் செடிகளும் புதைந்துபட்டுப்போய் உண்டானதே யென்பதற்கு அநேக நியாயங்கள் இருக்கின்றன. நாம் நிலக்கரிக்கனிகளுக்குள்ளே போய்ப்பார்த்தால் அங்கு சுரங்கங்களின் பக்கங்களிலும் மேற்பாகத்தும் இலைகள் செடிகள் முதலியவற்றின் சுவடுகளை நன்றாகக்காணலாம். அன்றியும் ஒருதுணுக்கு நிலக்கரியை யெடுத்துச் சுறண்டிப்பார்ப்பினும் அதிலும்கூட இச்சுவடுகள் காணப்படும்.

நிலக்கரியிற் சேர்ந்திருக்கும் பொருள்களில் முக்கியமானது. கார்பன் என்னும் கரிப்பதார்த்தமே. இது தவிர ஹைட்ரஜன், ஆக்ஸிஜன், நைட்ரஜன் என்னும் மூவகையான வாயு பதார்த்தங்களும் சில உலோக பாதார்த்தங்களும் கலந்திருக்கும்.

நிலக்கரியில் கார்பனென்னும் கரிப்பதார்த்தம் கலந்திருப்பதைக்காட்ட ஒரு துணுக்கு நிலக்கரியையெடுத்து வாய்திறந்த ஒரு பாத்திரத்திலிட்டுக் கொளுத்திவிட்டுப் பின்பு அதில் சுண்ணாம்புத் தண்ணீரை விட்டால் அச்சுண்ணாம்புநீர் உடனே பால் நிறமாக மாறும். இதனால் அதில் கார்போனிக் ஆஸிட் என்னும் கரிகலந்த வாயு உண்டாயிற்றென்று புலப்படும். இவ்வாயு கார்பன் என்னும் கரிப்பதார்த்தமும் ஆக்ஸிஜன் என்னும் வாயுப்பதார்த்தமும் கலந்து உண்டாவதாகும்.

நிலக்கரியிற் பற்பல பேதங்களுண்டு. அவற்றுள் முக்கியமானவை இரண்டு, ஒன்று மிகவும் கடினமானது. மற்றொன்று மிகவும் மென்மையானது. இந்தக் கெட்டிக்கரிக்கு அந்த்ரசைட் (Anthracite) என்று பெயர். இது இரும்புபோலக் கருப்புவருணமாய்க் கொஞ்சம் உலோகஜாதியின் பிரகாசமும் உள்ளது. இதில் நெருப்பு இலகுவில் பிடிக்காது. எரியும்போது ஜ்வாலையும் சொற்பமாகவே யுண்டாகும். புகையவேமாட்டாது. இதில் 100-ல் 90 - பாகம் கரிப்பதார்த்தமேயாம். வாயுவஸ்துக்கள் விசேஷமாகவில்லை. இக்கரி நீராவியந்திரங்களை முடுக்குவதற்கும் உலோகங்களை யுருக்குவதற்கும் அதிக காங்கை வேண்டியிருத்தலினால் அக்காரியங்களுக்கு விசேஷமாக உபயோகிக்கப்படும்.

மிருதுவான வகைக்கு நில்கரி (Bituminous Coal) என்று பெயர். இதில் கரிப் பதார்த்தம் நூற்றில் எழுபத்தொன்பது பாகம்தானுள்ளது. அது திறந்த வெளியான இடங்களில் கூட முழுதும் எரிந்துபோகாது. இது நிலக்கரிவாயு (Coal gas) உண்டுபண்ணுவதற்கு விசேஷமாக உபயோகிக்கப்படும்.

நிலக்கரியைக் காற்றோட்டமான திறந்த விடங்களில் எரித்தால் அதிற் சேர்ந்திருக்கும் பொருள்கள் அநேகமாக ஆகாயவாயுவிலுள்ள ஆக்ஸிஜனோடு கலந்துபோம். சிற்சில பொருள்கள்தான் அப்படிக் கலவாமற் சேஷித்துச் சாம்பலாய்த்தங்கும். இச்சாம்பலில் உப்பும் மண்ணும் கலந்திருக்கும்.

நிலக்கரியை வாய்மூடின பாத்திரத்திலிட்டெரித்தால் அதன் பாகங்கள் ஒன்றைவிட்டொன்று பிரிந்துகலந்து நிலக்கரிவாயு (Coal-gas) முதலிய பதார்த்தங்களாகமாறும். இந்நிலக்கரி மிகவும் உபயோகமானது. நிலக்கரியைப் பொடித்து கெட்டியான இருப்புக்கொப்பரைகளில் போட்டுச் சந்தில்லாமல் மூடி அவற்றின் கீழெரியிட்டு அக்கொப்பரைகளினின்றும் குழாய்களோடே இவ்வாயுவைச் சேர்ப்பார்கள். இவ்வாயுவில் அநேக வாயுபேதங்கள் சேர்ந்திருக்கும். அவற்றுள் சில ஒளியும் சில உஷ்ணமும் கொடுக்கும். இவ்வாயுவுக்குச் சுத்தமாயிருக்கும்போது நிறம், வடிவு இல்லாமையால் கண்ணுக்குத் தோன்றாது. வாசனைமட்டும் சிறிது இருக்கும். இது மிகவும் இலேசானது. ஆகாயவாயுவைவிட எட்டுப்பங்கு இலேசானது. ஆதலால் இது பல்லூன் (Balloon) என்னும் ஆகாயகமனம் செய்யும் வாகனத்துக்குஉபயோகிக்கப்படும். நெருப்பைக் கண்டால் புஸ்ஸென்று பற்றிக்கொள்ளும். இது எண்ணெய் போலொளிதந்தெரியுமாதலால் இதை இப்பொழுது அநேகபட்டணங்களில் வீதிகள், கூடங்கள் முதலிய இடங்களுக்கு விளக்குப் போட உபயோகிக்கிறார்கள். நிலக்கரியில் உள்ள கார்பன் ஹைட்ரஜன் என்னும் வஸ்துக்கள் இந்தக்கரிவாயுவிலும் உண்டு.

நிலக்கரிச் சுரங்கங்களில் முற்காலங்களில் அடிக்கடி நெருப்புப்பற்றி வெடித்து அநேக சேதங்கள் உண்டாவதுண்டு. இதற்குக் காரணமென்னெனில் இச்சுரங்கங்களின் வெடிப்புகளிலிருந்து சதுப்புவாயு என்று ஒருவிதமானவாயு விஸ்தாரமாக உண்டாகும். இதன் பத்துமடங்குகொண்ட ஆகாயவாயுவோடாயினும் இருமடங்குகொண்ட ஆக்ஸிஜனென்னும் பிராண வாயுவோடாயினும் சேருமாயின் துப்பாக்கி மருந்துபோல வெடிக்கும் சுபாவத்தைப்பெறும். அச்சுரங்கங்களில் வேலைசெய்யும் வேலையாட்கள் உபயோகிக்கும் விளக்குத்தீயால் நெருப்புப்பற்றிப் பயங்கரமாகவெடித்து அநேகருக்கு மரணத்துக்குக் காரணமாகும். இவ்விதமான கொடிய அபாயங்கள் பின்பு டேவி (Davy) என்பவர் நிருமித்த ஒருவகைச் சூக்ஷ்ம தீபத்தினால் நிவிர்த்திசெய்யப்பட்டன. இத்தீபம் சாதாரணமான எண்ணெய்விட்டெரிக்கும் விளக்கேயாம். ஆயினும் காற்றுத்திறப்பாய் விடப்படாமல் நுண்ணிய கம்பிகளால் வஸ்திரம்போலச் செய்த ஒருவகைக் கம்பிவஸ்திரத்தைக் குழாயாகச்செய்து அக்குழாய்க்குள்ளே வைத்து

மூடப்பட்டிருக்கும். இக்கம்பிக்குழாய் விளக்கின் ஜ்வாலையை வெளிவாராமல் தனக்குள் அடக்கிகொள்ளும் சுபாவமுடையது. அதனால் இத்தீபச்சுவாலையால் நெருப்புப் பிடிக்க வழியில்லை. தீபமும் கம்பிச் சந்துகளூடே வெளிச்சம் கொடுத்துப் பிரகாசிக்கும். இது சொற்ப யுக்தியானாலும் இதனால் எவ்வளவோ ஜனங்கள் கொடிய ஆபத்தினின்று காக்கப் படுகிறார்கள்.

இங்கிலாந்தின் பெருஞ் செல்வத்துக்குக் காரணமாயிருப்பவைகளுள் நிலக்கரியும் ஒன்று. இது அத்தேயத்தில் அபரிமிதமாக எடுக்கப்பட்டு அத்தேயத்தாரால் தமது சொந்தக்காரியங்களுக்கு உபயோகப்படுத்திக் கொள்ளப்படுவதன்றிப் பிறதேசங்களுக்கும் விஸ்தாரமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. ஐரோப்பா கண்டத்தில் உபயோகிக்கப்படும் நிலக்கரியில் முக்கால்வாசியும் இங்கிலாந்திலிருந்தே போகிறது. இது அங்கு மேலே கூறியபடி நீராவியந்திரங்களைமுடுக்குவதற்கும் செம்பு முதலிய உலோகங்களை உருக்குவதற்கும் மாத்திரமேயன்றி மற்றச் சமையல் முதலிய நித்தியவிர்த்தி கிருககிருத்தியங்களுக்கும் நாம் இங்கு விறகு உபயோகப்படுத்துவதுபோல உபயோகிக்கப்படும். யந்திரம் முதலானவைகளில் அநேகம் நிலக்கரியில்லாமற்போனால் பிரயோசனம் அற்றுப் போம். பிரபஞ்சத்திலுள்ள பிரதானமான நிலக்கரிக் கனிகளில் இரண்டு இங்கிலாந்திலிருக்கின்றன. அக்கனிகள் சமுத்திரத்தின்கீழ் நெடுந்தூரம் பூமிக்குள் வெட்டப்பட்டிருக்கின்றன. அச்சுரங்கங்களின் மேலுள்ள சமுத்திரத்தில் பெரிய கப்பல்கள் பாய்விரித்து ஓடும். இந்தியாவிலும் நிலக்கரி பற்பல விடங்களில் வெட்டியெடுக்கப்படுகின்றது. பங்காளத்தில் 'ரானீகஞ்சிலும்'' 'பண்டல்கண்டிலும்,' மத்தியமாகாணங்களிலும், நிஜாம் இராஜ்யத்திலும், அஸ்ஸாமிலும்வேறிடங்களிலும் இதுவிசேஷமாகக் காணப்படுகிறது. சிலவருஷங்களுக்கு முன்னே நம் தேயத்தில் இருப்புப்பாதைப் புகைவண்டிகளுக்கும், கைத்தொழில் செய்யும் இடங்களில் எந்திரங்களுக்கும் வேண்டிய நிலக்கரி இங்கிலாந்திலிருந்தாயினும், ஆஸ்திரேலியா, ஜப்பான் முதலான தேசங்களிலிருந்தாயினும் தருவித்துக்கொள்ள வேண்டியதாயிருந்தது. இப்போது பங்காளம், சிங்கரேணி முதலிய கனிகளிலிருந்து வருஷம் ஒன்றுக்கு (35,37,000) 35-லக்ஷத்து 37-ஆயிரம் டன் நிறையுள்ள நிலக்கரி வெட்டி யெடுக்கப்படுகின்றது. இக்கரி இத்தேயத்தில் வேண்டிய செலவுகளுக்குப் போதுவதேயன்றி அயல்தேசங்களுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. உலக முழுவதிலும் ஒருவருஷத்தில் வெட்டி யெடுக்கப்படும் நிலக்கரி 50-கோடிப்பாரம் ஆகுமென்று மதிக்கிறார்கள். இங்கிலாந்தில் மாத்திரம் ஏறக்குறைய முப்பதுகோடி யெடுக்கப் படுகின்றது.

---

## THE SCENERY OF THE CAUVERY.

## காவேரி நதியின் அழகிய காட்சி.

II.

இந்தப் பேராற்றைத்தொடர்ந்து முப்பது மைல் மேல்நோக்கிச்செல்ல திரிச்சிராப்பள்ளி மலையின் சிகரம் தோன்றும். இதற்கு ஆறு மைல் மேற்கே ஸ்ரீரங்கமென்னும் விசுத்தமாகிய தீவினால் இந்நதி இரண்டாகப் பிரிக்கப்படுகின்றது. இக்கிளைகளில் ஒவ்வொன்றும் அரை மைல் அகலமுள்ளதாய் இத்தீவின் இருபுறமும் ஓடுகின்றது. தென்கிளை தன் பெயரையே தரித்திருக்க வடகிளை கொள்ளிடம் என்னும் புதுப்பெயரைக் கொள்ளுகின்றது. இக்கொள்ளிடம் இங்கு இத்தீவின் முனையிலிருந்து மறு கரைவரையில் மேலைக் கல்லணையென்று பெயரிடப்பட்ட ஒரு கல்லணையால் கடிவாளம் பூட்டியதுபோலத் தடுக்கப்பட்டுள்ளது. இக்கல்லணையாவது, எண்ணூறு கெஜ நீளமும் ஏழடியுயரமுமாகிக் கொள்ளிடத்தின் அடித்தரைமீது குறுக்காகக் கட்டப்பட்ட ஒரு கற்சுவராகும். இதனால் காவேரியின் ஜலமானது தஞ்சாவூர் ஜில்லாவின் செழிப்பான விளைநிலங்களுக்கு நீர் ஏறிப்பாயும்படி உயர்த்தப்படுகின்றது. இவ்வாற்றின் கிளைகள் அநந்தம் கால்வாய்களாகப் பிரிந்து இந்நாடு முழுதும் பரவுகின்றன. இந்த அத்தியந்த ஜனோபகாரமானவேலை 1836-ம் ௵ ஸர். ஆர்தர் காட்டன் (Sir Arthur Cotton) என்பவரால் மூன்று லக்ஷம் ரூபாய் செலவு செய்து கட்டி முடிக்கப்பட்டது.

ஸ்ரீரங்கமென்னும் இந்த அழகிய தீவானது 12-மைல் நீளமும் ஒரு மைல் அகலமுமாகி எங்கும் தோட்டங்களும் பழமரங்களின் தோப்புகளும் உழுது பயிர்செய்த செழிப்பான வயல்களுமாயுள்ளது. இதன் மத்தியில் சப்தப்பிராகாரங்களையுடைய ஸ்ரீரங்கம் என்னும் விசாலமான கோயில் இருக்கின்றது. இங்கு சதுரமாகிய ஏழு மதில்கள் ஒன்றினுள் ஒன்றாய்ச் சுற்றியிருக்கும். இம்மதில்கள் 25-அடி உயரமும் நான்கடிக் கனமுமாகி ஒவ்வொரு பக்கத்திலும் வெளிமதில் ஒரு மைல்தூரம் பரவியிருக்கின்றது. இம்மதில்களுக்கிடையே நூற்றுப்பன்னிரண்டு கஜம் விசாலமுள்ளது. ஒவ்வொரு பக்கத்திலும் நடுவில் வெகு வேலைப்பாடுபெற்ற கல்லிற் சித்திரிக்கப்பட்ட கோபுரங்களையுடைய உயர்ந்த வாயில்களும் இருக்கின்றன. வெளிமதிலின் வடக்கு வாயிற் கோரபும் முற்றிலும் கட்டப்படவில்லை. முதல் நிலைமாத்திரமே கட்டி முடிந்திருக்கிறது. இதுமாத்திரம் முழுதும் கட்டப்பட்டிருக்குமாயின் இத்தேசத்திலுள்ள கோபுரங்கள் எல்லாவற்றிலும் உயர்ந்ததாயிருக்கும். இதன் கால்கள் முப்பத்துமூன்றடி நீளமும் ஆறடிச் சதுரமுமாகி ஒரே கல்லினால் சமைக்கப்பட்டிருக்கின்றது. அளவிறந்த செல்வத்தைப்பெற்ற இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் கடவுள் ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அவதாரம். இவர் எல்லாவற்றிற்கும் உள்மதிற்குள்ளே ஒரு சிறிய கோயிலில் எழுந்தருளியிருக்கின்றனர். வெளிப்பிராகாரங்களில் கோயில் அர்ச்சகர்களும், ஸ்தல தரிசனம் செய்யவந்தவர்களும் வசிக்கின்ற அநேக வீடுகளும் அவர்களுக்குபயோகமாக ஏற்பட்ட கடைகளுமாயிருக்கும். இக்கோயிலின் பொக்கிஷத்திலுள்ள எண்ணிறந்த உயர்ந்த நகைகளையும் அவற்றிற் பதித்த அற்புதமான காந்தியை வீசுகின்ற வச்சிர வைடூரிய கோமேதக மரகத புஷ்பராகாதி அளவிறந்த அருமையான இரத்தினங்களையும் விவரிக்க இங்குஇடமில்லை. இங்குள்ள விக்கிரகத்துக்குச்சாத்தும் அளவிறந்த இரத்தினங்கள் பதித்துத் தக தகவென்று ஜாஜ்வல்யமாய் ஜொலிப்பதான பொற்கவசமும், அரசனையும் விலைக்குவாங்கும் அரிய இரத்தினஹாரங்களும், லக்ஷோபலக்ஷம் விலையுயர்ந்த முத்துக்கோத்துத் தைத்த வஸ்திரங்களும் கொடைகளும் பத்தரைமாற்றுத் தங்கத்தாற்செய்த ஏராளமான நீர்க் குடங்களும் அண்டாக்களும் இங்கு உள்

ளன. இவை அநேக கற்கம்பங்கள் நிறுத்தப்பட்ட உன்னதமான ஒருமண்டபத்தில் பார்க்க வந்தவர்களுக்கு வைத்துக் காட்டப்படும். இம்மண்டபத்தின் முன்பக்கத்தில் சித்திர வேலை செய்யப்பெற்ற எட்டு ஸ்தம்பங்கள் உள்ளன. ஒவ்வொரு ஸ்தம்பத்திலும் ஒரு மனிதன் குதிரைமேலேறிச் சவாரிசெய்வது போலவும், அக்குதிரைக்குப் பின்பு அதன் முதுகில் ஒரு புலி விழுந்து பாய்வதுபோலவும் அப்புலியை இரண்டு காலாள்கள் அடர்ப்பதுபோலவும் ஒரே கல்லில் உயிரளவுள்ளவாய்ச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றது.

இங்கு ஒவ்வொன்றிலும் முப்பத்திரண்டு உயர்ந்த கண்வாய்கள் உள்ள இரண்டு நீண்ட பாலங்கள் இத்தீவை இருபுறமும் ஆறுகளுக்கு அப்புறத்துள்ள கரைகளோடு இணைக்கின்றன. இப்பாலங்களின்மேல் ராஜபாட்டை திருச்சிராப்பள்ளியை நோக்கிச்செல்லுகின்றது.

இந்தப் பெயர்போன புராதனபட்டணத்தின் நடுவே பிரசித்திபெற்ற மலைகோட்டையொன்றுள்ளது. இம்மலை மேருமலையின் சிகரங்களில் ஒன்றென்றும் தேவர்களால் இங்கு சேர்க்கப்பட்டதென்றும் இந்துக்கள் சொல்லுவார்கள். பன்றியின் முதுகுபோல உருவமைந்த இத் தனிப்பாறையானது ஒரு முனையில் மிகவுயர்ந்து ஆற்றுமட்டத்துக்கு 350-அடி யோங்கிய கொடுமுடியாகி உச்சியில் ஒரு சிறிய தேவாலயத்தையுடையது. அதன் அடிவாரங்களில் வீடுகளும் மருந்தறைகளும் நான்குபக்கமும் அதனைச் சூழ்ந்து இருக்கின்றன. இதற்குச் சற்றுமேலே ஒரு விநோதமான தெருவு இதைச்சுற்றி யோடுகின்றது. கொடுமுடியின் கீழே அதற்குப் பாதி உயரத்தில் கோட்டைபோன்ற ஒரு பெரியகோவில் இருக்கின்றது. அகன்ற கற்படிகள், இருபுறமும் சுவர்களும் மேலே மண்டபமும் ஆகிக் கோவிலுக்குட் செலுத்துகின்றது. மலையின் உச்சிக்குப்போவதற்கு அம்மலையைச்சுற்றிப் படிகள் வெட்டப்பட்டிருக்கின்றன. இம்மலையின் உச்சியில் இருந்துபார்த்தால், அதியற்புதமான அழகிய காட்சி கண்ணுக்கு நெடுந்தூரம் தெரியும். இதையடுத்துக் கீழே, நீண்ட நேரான வீதிகளையுடைய பட்டணமும், கர்நாடக நவாபுகளின் இடிந்துபோகின்ற அரண்மனையும்' கோவில்களும், பள்ளிகளும் அவற்றின் சிகரங்களும் தோன்றும். வெளியோரங்களில் ஐரோப்பிய சேனைத்தானத்தைச்சேர்ந்த அனேகம் வெண்மையான கட்டிடங்களும் பங்களாக்களும் தோன்றும்.

இந்தப்புராதனமான மலையைச்சுற்றி ஆயிரம் வருஷகாலமாக அநேக யுத்தங்களும் முற்றுகைகளும் நடந்திருக்கின்றன. இதைப் பெறும்பொருட்டு முதன்முதல் தென்தேயத்தில் பழமையான இந்து இராஜவமிசங்களின் இராஜாக்கள் சண்டையிட்டனர். பின்பு மகமதீபரும், மகாராஷ்டிரரும்' பிரெஞ்சுக்காரரும், கடைசியாக இங்கிலீஷ்காரரும் வந்தார்கள். இக்கோட்டையினிடத்து நடந்தது போல இத்தனை யுத்தங்களும் முற்றுகைகளும் துணிகரமான வீரச்செய்கைகளும் ஜபாபஜயங்களும் வேறு ஒரு கோட்டையிலும் நடந்திரா. இங்கு கிளைவ் என்னும் இங்கிலீஷ் சேனை நாயகர் நூறுமடங்கு அதிகரித்த படைகளையும் இலக்ஷியம்பண்ணாது பொருது வெற்றி கொள்ளுந் திறமையும் ஆளும் வன்மையும் முதன் முதல் இவ்விடத்தே தமக்குத் தோன்றக்கண்டனர். இந் நகருக்கு வெளியேயுள்ள பொன்மலை, பிரெஞ்சுமலை, எறும்பீச்சுரம் என்னும் இடங்களில் லாரன்ஸ் என்னும் இன்னொரு இங்கிலீஷ் தளகர்த்தர் பிரெஞ்சுக்காரரோடு அதிபயங்கரமாக அநேக போர்கள் செய்தவற்றை இன்னும் அவ்விடங்கள் எடுத்துக் கூறுகின்றன.

ஸ்ரீரங்கத்திலிருந்து கொள்ளிடம் அதன் வழியே 60-மைல் தூரம் வரையில் யாதும் மாறுபாடில்லாமல் சென்று சிதம்பரம் என்னும் பெரிய தேவாலயத்திற்குச் சிறிதுதூரத்திலுள்ள * பறங்கிப்பேட்டைக்குச் சமீபமாகச் சமுத்திர சங்கமமாகின்றது. இந்த

* Porto Novo.

உன்னதமாகிய சிதம்பரக்கோயில் பார்ப்பவர்களுக்கு ஆச்சரியகரமாய் இருக்கும். இதன் சுவர்கள் 40-அடி நீளமும் ஐந்தடி கனமும் உள்ள ஏகாண்டமான கருங்கற்களால் அமைக்கப்பட்டிருக்கின்றன. இக்கற்கள் 100-மைல் தூரத்திலிருந்துகொண்டு வரப்பட்டிருக்கவேண்டும். இவ்வாலயம் இப்போது சைவ சமயத்தாரதாயினும் இது உண்மையில், அறியப்படாத கடவுளுக்கே பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளது. இதன் உள்ளே இரகசியம் என்று கதவுகளாவது ஜன்னல்களாவது இல்லாத ஒரு அறை இருக்கின்றது. இவ்வறையில் நாமரூபங்கள் இல்லாத பராபரன் நிவசித்திருப்பதாக நம்புகிறார்கள். இதற்குள்ளே போய்ப் பார்த்தவர்கள் ஒருவரும் இல்லையாயினும் இதற்குள்ளே போவதற்கு ஒரு இரகசியமான வழியுண்டென்றும் அவ்வழி கோவில் தீக்ஷிதர்களில் ஒருவருக்கே தெரிந்திருக்குமென்றும் அவர் தமது மரணகாலத்தில் தமக்குப் பின்வருபவனுக்கு அந்த இரகசியத்தை வெளியிடுவாரென்றும் சொல்லுகிறார்கள்.

ஸ்ரீரங்கத்தீவின் கிழக்குக்கோடியில் கொள்ளிடமும் காவேரியும் அனேகமாய் ஒன்றோடொன்று கிட்டத்தட்டச் சேருகின்றன. அவற்றைச் சேராமல் ஒரு பெரிய சுவர்போல் காவேரியின் குறுக்கே கட்டப்பட்ட பெரிய கல்லணை ஒன்று உள்ளது. மிகுந்த ப்ரவாக சமயங்களில் அளவுக்குமிஞ்சின ஜலம் பள்ளத்தரையில் ஓடுகின்ற கொள்ளிடத்தில் பாயும். இது வெகு பழமையானவேலை. முற்காலத்தில் இந்துக்களுக்குள்ளே பெறப்பட்டிருந்த கல்வியையும் சாமர்த்தியத்தையும் தெரிவித்து இதனால் உத்தேசிக்கப்பட்ட காரியம் முற்றும் நிறைவேற்றுகின்றது. 'டெல்டா' நிலங்களுக்கு நீரேறிப் பாய எவ்வளவு உயரம்வேண்டுமோ, அவ்வளவு உயரம்மட்டும் வைத்து அதிக சலத்தை கழித்துவிடுகின்றது. இது நெளிந்து பாய்பு போல் செல்லுவதால் இதன்மேல் உள்ள பாலமும் நெளிந்து செல்லுகின்றது. பார்வைக்கு சிவசமுத்திரம் பாலம்போலவே இதுவும் விசித்திரமாகத்தோற்றும். தென்தேசத்துக்குப் பூம்பொழில் போன்ற தஞ்சை நாட்டுக்கு இதுதான் ஆரம்பம். இந்த சலத்தினால் வருஷந்தோறும் ஏழு இலட்சம் ஏகரா நிலங்கள் சாகுபடி செய்யப்படுகின்றன. பெரிய கல்லணையிலிருந்து காவேரி அநேகம் பெரிய கிளைகளாகிச் சாகுபடிக்கு உபயோகமாகப் பிரிந்து செல்கின்றது. அவற்றில் ஒவ்வொன்றும் ஒரு பெரிய நதிக்குச் சமானமாகும். இக்கிளைகள் வேறு அனேகம் சிறு கிளைகளாகப் பிரிந்து அவற்றினின்றும் அனேகம் கிளைகள் பிரிந்து தேசமெங்கும் நதிகளும் கால்வாய்களுமாய்ப் பின்னிக்கொண்டிருக்கும். இந்நதி மேலுள்ள பட்டணங்களில் முக்கியமான இன்னொரு பட்டணம் கும்பகோணம். இங்கு இந்நதி கூடிய வரையில் அகலம் உள்ளதாய் உருவத்தில் சுருங்காமலே இருக்கின்றது. இந்நகரின் ஜனத்தொகை 50,000. இது தென்னிந்தியாவில் உள்ள புண்ணியஸ்தலங்களில் ஒன்றாகப் பாவிக்கப்படுகின்றது. இங்கு சர்க்கார்வேலையிலிருந்து பென்ஷன்பெற்றுக்கொண்ட அனேக சுதேச உத்தியோகஸ்தர்கள் வாசம் செய்கிறார்கள். ஜனங்கள் வெவ்வேறு தேசத்துக்குத் தக்கபடி தமது அபிருசிகளில் வேறுபடுதற்கு இது நல்ல திருஷ்டாந்தமாகும். ஒரு தேசத்தாருக்கு எது மிகவும் இஷ்டமானதோ அது மற்றொருதேசத்தாருக்கு ஸஹ்பமாயிருத்தற்கும் இதுவே திருஷ்டாந்தமாகும். இந்துக்கள் மலைநாடுகளையும் அவ்விடத்தின் சீதோஷ்ணஸ்திதிகளையும் வெறுக்கிறார்கள். ஐரோப்பியர்களோ அப்பிரதேசங்களுக்கு விரும்பிச்செல்கிறார்கள். இக்கும்பகோணப் பட்டணமானது உக்கிரமான வெயிலும் நான்கு பக்கத்திலும் முடிவில்லாத நன்செய் வயல்களும் தோப்புகளுமாய் எவ்வளவு இந்துக்கள் விரும்புகிறார்களோ அவ்வளவு ஐரோப்பியர்களுக்கு வெறுப்பாயிருக்கும். இங்கு அரிசி முதலிய பதார்த்தங்கள் மலிவாக இருப்பதனாலும் வெயில் கோடைக்கும் மாரிக்கும் அதிக பேதப்படாமல் ஒரே சீராக இருத்தலா

லும், உடல் களைக்கக் குன்றேறி இறங்கவேண்டுவதில்லையாதலாலும் பத்துப் பன்னிரண்டு தேவாலயங்களும் ஸ்நானபானங்களுக்கு யோக்கியமான புண்ணிய நதியும்இருத்தலாலும் இது அவர்களுக்கு அவ்வளவு இனிமையாய் இருக்கின்றது. கும்பகோணத்திற்கு இரண்டு மூன்று மைல் கிழக்கே இந்நதி தன் பெருங்கிளைகளில் கடைசியானதொன்றைப்பெற்று, அதன் பின்பு ஒரு அற்பமாகிய சிற்றாறுபோற் குறுகிப்போகின்றது. மனிதன் தன் முடிவுகாலத்தில் எப்படிக் குழந்தைத்தன்மையை மறுபடியும் அடைகின்றானோ அதுபோலவே இதுவும் குறுகி மெலிந்துபோயிருக்கின்றது. உலகத்திலுள்ள நதிகளில் இதுபோலத் தன் ஜலத்தை ஒரு துளிகூட வீண்போக்காமல் மனிதருக்கு உபயோகமாக்கும் ஆறு விசேஷமாய் வேறு இல்லையென்றே சொல்லவேண்டும். பலகிளைகளாகப் பிரிந்து நீரெல்லாம் இழந்து சொற்ப ஜலத்துடன் சிலுசிலு என்று பாய்கின்றமணற்றரையின்மீது நாணல் நிறைந்த தீவுகளூடே சுற்றிச் சுற்றிச்செல்லும் வழிப்போக்கன்போலச் செல்லும் இதன்கதியை நாம் தொடர்ந்து செல்லுதல் அவசியமில்லை. கடைசியில் ஆசைப்பட்டு அடையவந்த அலைகளினோசையைக் காதால் கேட்கப்பெற்றுப் பிரகாசமானதும் அமரிக்கையானதும் நக்ஷத்திரங்கள் எழுந்து கீழ்த்திசையில் ஒளிவிட்டுத்தோன்றப் பெறுவதும், ஆன ஜலநிதியைத் தனக்கு முன்னே விரிந்து தோன்றவும் காணப்பெற்று மணமகனைத் தேடியடையும் காதலியைப் போலக் களிப்புற்றுக் கலக்கின்றது.

இதன் கீழ்த் திருநயம்கிருஷ்ணபாரதிகள் என்னும் செந்நாப்புலவர் இயற்றியருளிய திருவையாற்றுக்கப்பலில் இருந்து, காவேரிச்சிறப்பென்னும் பாடலை எடுத்து வரைகின்றோம். இப்பாடலில் காவேரியுற்பத்தியானது முதல் சங்கமமாகும் வரையில் உள்ள முக்கியமான ஸ்தலங்கள் வரிசைபாக விவரிக்கப்பட்டிருக்கின்றன.

## காவிரித் திருநதிச்சிறப்பு.

கப்பல்பாட்டு.

அம்புயன்மால் தேடரிய—திருவை
யாற்றில் நிதம் அறம்வளர்த்தாள்
அம்பிகைதன் அருளாலே—பெருக்கம்
அணிந்துவரும் காவேரி.

முடுகு.

1. அம்பரம் தொடுசையமலையில் நிலை — பெற்று
அகத்திய மஹாமுனி கடத்தினில் — உதித்து
அண்டர் புகழும் பிர்மகுண்டமதில் — வந்து
அறிபொணுப்பாதாள நெறியினை — அடைந்து,

2. தின்புவியிலே ராமநாதபுரம் — கூடி
திருவேணி சென்று ருத்திரர் அடியை — நாடி
ஸ்ரீரங்கபட்டணத்திருபால் — நிகழ்ந்து
ஸ்ரீகண்ட நரசிங்கபுரமதில் — இணைந்து,

3. வம்பு பெருகும்யானைக்குந்திமலை — துன்னி
மாதேவபுரம் சிவசமுத்திரம் — மன்னி
மாநிலத் துயருய் பவானியை — அடுத்து
வாஞ்சையுட னீரோடொருஞ்சலூர் — உற்று,

4. முன்புகொடு முடிவந்து வேலூரைச் — சேர்ந்து
மோகனூர் கண்டு நெறியூரருகில் — சார்ந்து
மோதிவருகின்ற அமராவதியைத் — தேக்கி
முக்கூடல் மாயனூர் அயிலூரைத் — தாக்கி,—

* * * * என்றிருக்கிறது.

## SNAKE STORIES.

### பாம்பைப்பற்றிய கதைகள்.

ஒருநாள் காலையில் பாம்புபிடிக்கும் ஜாதியைச் சேர்ந்த பிடாரஸ்திரீ மூன்று வயதுள்ள ஒரு குழந்தையை இடுப்பிற் கட்டிக்கொண்டு ஒரு பாம்பைக் கழுத்தில் சுற்றிக்கொண்டு நானிருந்தவீட்டில் பிச்சைக்கு வந்தாள். அந்த வீட்டிலுள்ள 5-வயதுக் குழந்தையொன்று அவளிடத்திருந்த பாம்பைக் கண்டு பயந்தது. இந்தக்குழந்தை பாம்பைக்கண்டு பயப்படுகிறதே அவளிடுப்பிலிருக்கும் சிறுகுழந்தை பயப்படுகிறதா பார் என்றேன். நான் இப்படிச் சொல்லவும் அவள் தன் கழுத்திலிருந்த பாம்பையெடுத்து அவள் குழந்தையினுடைய கழுத்தில் சுற்றிவிட்டாள். அக்குழந்தை அதைத் தனக்குக்கழுத்திலிட்ட சரப்பளி ஹாரம்போல் கையினால் அப்பாம்பைப் பிடித்து வாயில்வைத்துக்கொண்டு விஷமம் செய்து விளையாடிக் கொண்டிருந்தது. இந்தக் காக்ஷியைக்காணவும் அதைக்கண்டு பயமுற்ற 5-வயதுக்குழந்தை முற்றும் பயந்தெளிந்து கிட்டவிருந்து வேடிக்கைபார்த்தது. இதனால் பாம்பைப்பற்றிய பிரஸ்தாபம் வளர்ந்தது. சாரைப்பாம்புக்கு வாயில் விஷமில்லையாதலால் கடித்தால் குற்றமில்லையென்றாள் அப்பிடாரச்சி. சாரைம்பாம்புகடித்தால் தோஷமில்லையாவென்ற கேள்விபிறந்தபொழுது, சாரைக்கு "வாலில் விஷம்", கடித்துவிட்டு கடித்தவிடத்தை வாலாலடித்தால் தோஷமுண்டு என்றாள். பிறகு ஸர்ப்பம் அல்லது நல்லபாம்பைப்பற்றி வார்த்தைபிறந்தது. நல்லபாம்புக்கு "நல்ல" என்கிற அடைப்பெயர் என் வந்ததென்றால் அது கடித்தால் ஹிம்ஸையின்றி உடனே விஷம் தலைக்கேறி மரணமுண்டாவதால் அதற்கு அந்த அடைமொழி கொடுக்கப்பட்டதென்று பண்டிதர் ஒருவர் எனக்குச் சொன்னார். நல்லபாம்பு தனக்குத் தீங்கு நினைத்தாலன்றி ஒருவரைக்கடிப்பதில்லையென்றுசொல்கிறார்களே அது வாஸ்தவமாவென்று நான் கேட்டேன். அதற்குக் கெடுதல் செய்தால் கடிப்பதோடு அதற்கு அஞ்சினாலும் கூசினாலுங்கூடக் கடிக்குமென்றாள். இதற்கு ஸாதாரணமாக கோயிலுத்ஸவங்களில் தேவடியாள் நல்லபாம்பை மாலையாக அணிந்துகொண்டு, அது அவள் தோளின்மேல் படமெடுத்து அசைந்தாட அவள் ஸ்வாமியின்முன் நர்த்தனம் செய்வதுண்டென்றும் அதையவள் அனேகந் தடவை பார்த்திருக்கிறதாகவும் சொன்னாள். இந்த ஆட்டம் காஞ்சிபுரத்தில் நவராத்திரி உத்ஸவகாலத்தில் ஆடுவதுண்டாம். அதை நான் பார்த்ததில்லையானாலும், இதராள் பார்த்ததாகச் சொல்லக்கேட்டதுண்டு. இதற்கு ஆதாரமாக, டைம்ஸ் பத்திரிகையில் "ஹோம் பேபர்" என்னும் சீமையில் பிரசுரமாகும் ஒரு பத்திரிகையிலிருந்து "ஸர்ப்பமும் மனிதனும்" என்ற விஷயமொன்று எடுத்துப் பிரசுரிக்கப்பட்டிருந்ததில், பல அம்சங்கள் இந்தக்கொள்கைக்குப் பொருந்தினதாகவிருக்கக் கண்டேன். அதில் கண்ட உண்மையுதாரணங்களில் சிலவற்றை இங்கு எடுத்துரைப்பேன்.

"கூத்தாடி நல்லபாம்பை மேலே விட்டுக்கொண்டு கூத்தாடுகிறானே; அதற்கு ஆத்திரமுண்டாகும்படியாக ஒன்றும் நேரிடாதமட்டின் அவனுக்கும் பயமில்லை அதுவும் ஒன்றும் செய்யாதுதான்: ஏதோ அவனன்றி இதரகாரணங்கள் எதனாலாவது அதற்கு ஆத்திரமுண்டாகநேரிட்டால் உடனே அப்பாம்பு மரணமளிக்கும் மாரகனாக மாறிவிடுகிறது."

"1860-ம் வருஷத்தில் ஒரு வித்தையாடி சென்னையில் பயிரங்கமாய் வித்தையாடிக்கொண்டிருக்கும்பொழுது மலைப்பாம்பு ஒன்றை அவன்மேல் சுற்றும்படிவிட்டு நின்றுகொண்டிருந்தான். இந்த மலைப்பாம்பின் சுபாவம் ஆளையோ வேறு எதையோ தன்னுடலால்

சுற்றி ஒரு நெருக்கு நெருக்கினல் தவடுபொடி யாகச் செய்துவிடும். இப்பாம்பு இவனை யொன்றும் செய்கிறதில்லையென்று காட்ட இவன் அதைத் தன்னுடம்பில் சுற்றிக்கொண்டு நின்று வேடிக்கைகாட்டுகிறது வழக்கம். குறித்ததருணத்தில் அவன் வேடிக்கைகாட்டிக்கொண்டு நின்றபொழுது மடமடவென்று முறுக்கு நொறுக்கினாற்போல் அமர்ந்த சப்தமொன்று கேட்டது. உடனே நின்றுகொண்டிருந்த மனிதன் சுற்றின பாம்பு சுற்றினபடியிருக்க வெட்டிச்சாய்ந்த மரம்போல் கீழே விழுந்துவிட்டான். பிறகு அந்தமனிதனுடலைப் பரிசோதனைசெய்து பார்த்தபொழுது 180 இடங்களில் எலும்பு நொறுங்கி யிருக்கக் காணப்பட்டது. பாம்பைப் பரிசோதித்துப் பார்த்ததில் அதனுடலில் 2-அங்குல அகலத்துக்கு சதை கிழிந்து காயம்பட்டிருந்தது. அதன் காரணத்தை ஆராயுங்கால், அந்த வித்தையாடி தேகத்தில் பொதிந்திருந்த தமரூசியொன்று பாம்பின் சரீரத்தில் பட்டுக் குத்த அது உடனே தன் உடம்பை நெருக்க இந்த வில்லங்கம் விளைந்ததென்று தெரியவந்தது.''

''இப்படியே அமெரிக்காவில் ஒரு மாணாக்கன் ஒரு மலைப்பாம்பை இரவல்வாங்கி அதன் குணசுபாவங்களையறிந்துகொள்ளும்பொருட்டு அதைத் தான் படிக்கும் அறையில் கூண்டைவிட்டு வெளியில் அதனிஷ்டப்படி போகவிட்டுப் பார்த்திருந்தான். அப்பொழுது அந்த அறையின் கதவு ஒருக்களித்து சாத்தப்பட்டிருந்தது. அதன் வழியாக ஒரு பூனை உள்ளேவர ஒரு நாற்காலியைச் சுற்றிக்கொண்டிருந்த அப்பாம்பு அதன் உடலை நெருக்கி அந்த நாற்காலியை சுக்குத்தூளாகப் பொடிசெய்துவிட்டு அந்த அறையில் பரபரப்போடு ஆத்திரப்பட்டு ஓடத்தலைப்பட்டது. இதன் உள்ளத்தை காரணபடி ஆராய்ந்தறியாதவர்கள் உள்ளே பூனை வந்ததனால் அதைக்கண்டு மருண்டு அப்பாம்பு அச்சேஷ்டைசெய்த தென்பார்கள். ஆனால் உண்மையதுவல்ல. உள்ளபடி ஆராயும்பொழுது அந்நாற்காலியில் நீட்டிக்கொண்டிருந்த ஆணிமுனை யொன்று பாம்பின் உடலில் குத்த அதனால் அந்த சேஷ்டை செய்யநேரிட்டதென்று தெரியவந்தது. அந்த ஆணிகுத்தின காயம் பாம்பின் உடலிலிருந்து உபத்திரவம் செய்ததால் அது அறையில் ஆத்திரப்பட்டு ஓடியலைந்தது.''

பெங்களூரில் மூன்று ஸோல்ஜர்கள் நல்ல ஸர்ப்பம் ஒன்று ஒரு புதரில் சுற்றிக்கொண்டு கிடக்க மூன்றுநாள் வரையில் அவர்கள் அதைத் தொட்டுத்தடவி விளையாடிவர அவ்வளவுக்கும் அது ஒன்றும் செய்யாமல் பெட்டிப் பாம்புபோல் அடங்கியிருந்தது. கடைசியில் அதையிழுத்துக் கீழேபோட்டு அடிக்கப்போகையில் சீறிக்கொண்டு படமெடுத்துக் கடிக்கச் சென்றதாம். வெள்ளைக்கார ஸோல்ஜர்கள் நல்லபாம்பென்று பார்ப்பார்களா? அவர்கள், அதை யடித்துக் கொன்றுவிட்டார்கள். இதைக் கண்ணால்கண்ட ஒருவர் பத்திரிகைக்கு இதைப்பற்றி யெழுதியிருக்கிறார். பத்திரிகையில் இன்னொரு உண்மையான பாம்புக் கதை சொல்லப்பட்டிருக்கிறது. திருவாங்கூரிலுள்ள பிரிடிஷ் ரெஸிடெண்டவர்கள் திருவனந்தபுரத்திலிருந்து குற்றாலத்துக்குப்போய்க்கொண்டிருக்கையில் வழியில் 12-அடி நீளமுள்ள பெரிய மலைப்பாம்பு ஒன்று குறுக்கே படுத்துக்கொண்டிருக்கக் கண்டார்கள். ரெஸிடெண்டவர்களுடைய குதிரைக்காஸ்தாரிகள் இருவர் அதை வழியைவிட்டுப்போகும்படி என்னதான் செய்தும் அது அசையாமற் படுத்துக்கொண்டிருந்தபடியால் அவர்கள் அதைச் சுருட்டி ஒரு பாயில்வைத்துப் பொட்டலம் போல்மூடிக் கயிற்றால்கட்டி குளத்தப்புழையில் ரெஸிடெண்டு தங்கியிருந்த கூடாரத்திற்கு அதைக்கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அங்கு

போய் அதை அவிழ்த்துக்காட்ட 12-அடிக்கு மேல் பெரிதாயிருந்த அப்பாம்பு மெதுவாக நெளிந்து ஊரத்துவக்கிற்று. அது ஊர்ந்து செல்லும்பொழுது அது போகக்கூடாத இடங்களுக்குப் போய்விடாவண்ணம் ஒரு குதிரைக் காஸ்தாரி அதன் வாலைப்பிடித்து இழுத்து நிறுத்திவந்தான். அது மெதுவாக ஊர்ந்ததானாலும் சௌக்கியமான ஸ்திதியிலிருந்ததாகத் தெரியவந்ததால் ரேஸிடேண்டவர்கள் அதை மறுபடியும் பாயில் போட்டு சுருட்டிக் கட்டி திருவனந்தபுரத்தில் மஹாராஜா தோட்டத்தில் விலங்குவகைகள் வைத்துவளர்த்து வரும் உத்தியோகஸ்தருக்கு அனுப்பும்படி உத்தரவு செய்து பத்மநாதபுரம் தாசில்தாரிடம் அதை ஒப்புவித்தார். அந்தத் தாசில்தார் அப்பாயின் ஓரங்களை நன்ருகத் தைத்து இரண்டு கூலிகளைவிட்டு அதை 40-மைல் தூரம் சுமர்ந்து கொண்டுபோய் திருவனந்தபுரத்தில் கொண்டு போய்ச் சேர்க்கச்செய்தார், திருவனந்தபுரத்தில் வனவிலங்குகள் வைத்துக் காப்பாற்றி வரும் உத்தியோகஸ்தர், அவருக்கு வந்த அம்மூட்டையைப் பிரித்துப் பார்த்தபொழுது அது மிகவும் அபூர்வமான ஒரு பெரிய மலைப்பாம்பு என்றும், அந்தப் பாம்பு கிடைத்தது அவருக்கு ஒரு பெரிய பொக்கிஷம் கிடைத்ததுபோலாயிற்றென்றும் சொல்லி மிக அதிசயப்பட்டுக் கொண்டாடினுர். இந்தப்பாம்பின் சுபாவமின்னதென்று அவர் சொல்லத்தெரிந்து கொண்டபின், அதைக்கண்ட குதிரைக்காஸ்தாரிகள் முதல் அதைத் திருவனந்தபுரத்துக்குக் தூக்கிக்கொண்டுபோன கூலிகள் ஈருக, ரெஸிடெண்டு, தாசில்தார் எல்லாரும் அப்பாம்பினுல் மாளாமல் தப்பியது அவர்கள் அதிஷ்டந்தான் என்று இவ்விஷயத்தை பத்திரிகைக்குத் தெரிவித்தவர் சொல்கிருர். ஆனல் இப்பாம்புகளை நாம் உபத்திரவம் செய்யாவிட்டாலும் அதன் கோபத்தைக் கிளப்பி விடாவிட்டாலும் அது நம்மை யொன்றும் செய்கிறதில்லை யென்றும் உண்மை இவ்வுதாரணங்களால் இன்னுமதிகமாய் உறம்பெற்றதன்றி வேறில்லை.

பாம்புகள் கடிப்பதற்கு அவற்றின் தேகம் ஒரு விதமாகவளைந்து நெளிந்துகொண்டிருக்க வேண்டிய தவசியமாம். அவ்விதவளைவு நெளிவுக்கு இடமின்றி ஒரு பாம்பின் உடலைத் தலை முதல் வால் வரையில் ஒழுங்காக விருக்கும்படி நேர் நீட்டிவிட்டால் அதை நாம் என்னசெய்த போதிலும் அதற்குத் தீங்குசெய்ய முடியாமற் போகிறது. இந்த சூக்ஷ்மத்தைப் பாம்புபிடிக்கிறவர்கள் வெகு சீக்கிரத்திலறிந்து கொள்ளுகிருர்கள். புத்திலிருக்கும் பாம்பை இந்த தைரியத்தைக்கொண்டே சரசரவென்று பிடித்திழுக்கிருர்கள். புத்தைவிட்டு வெளிவந்ததும் பாம்பு வளைந்துகொண்டு மேல்விழுந்து கடிக்காதபடி அதைக் கரகரவென்று தலையைச்சுற்றிச் சுழற்றி அதன் நரம்புகளெல்லாம் வலுவிழந்து போகும்படி செய்து அதைத் தரையில் தொப்பென்று போடுகிருர்கள். சுற்றிச்சுழற்றின் விசையில் வலியிழந்த பாம்பு பழுதைபோல் நீண்டு கிடக்கும்பொழுது அதன் பல்லைப்பிடுங்கி விஷத்தை யெடுத்துவிடுகிருர்கள். நானிருந்த ஊரில் பாம்புபிடிக்கும் பிடாரன் ஒருவன் இந்த உபாயத்தைக்கொண்டு எத்தனையோ மகாபெரிய ஸர்ப்பங்களையெல்லாம் பிடித்து பழுதையைச் சுருட்டுவதுபோல அதைச் சுருட்டிக் குடத்திலடைக்க நான் பார்த்திருக்கிறேன்.

பாம்பினிடத்தில் உயர்ந்த ஞானகுணமும் மிக்க கொடிய விஷகுணமும் சேர்ந்திருப்பதால் அதை ஆத்மஞான போதத்தில் அடிக்கடி உதாரணமாக வெடுத்துக் கூறியிருக்கிருர்கள் ஹிந்துக்கள்மட்டும் நல்லபாம்பை விஷமுள்ள ஜந்துவென்று அறிந்தும் அதை சுப்பிரமணிய ஸ்வாமி யென்று சொல்லி ஈசுவரனின் பிள்ளையாகப்பாவித்துக் கொண்டாடுகிருர்கள். பைபலில், ஏவாளைப் பாபவழியில் செல்லத் தூண்டினது பாம்பென்று சொல்லியிருந்தாலும் ஏசு கிறிஸ்து ஓரிடத்து "ஸர்ப்பத்தின் ஞானம் போல்" என்று அதன் ஞானகுணத்தை உயர்த்திச் சொல்லியிருக்கிருர். இதைப்பற்றி விரித்தெழுதுவதில் விஷயம் வளர்ந்துவிடுமென்று இவ்விஷயங்களைக் குறிப்பிட்டுக்காட்டியதோடு நிறுத்துகிறேம்.

## OPEN COLUMN.

Admission to these pages are subject to our usual rule which gives the Editor complete control over the Mss. placed in his hands.

### EDUCATION OF GIRLS:—SOME DEFECTS AND REMEDIES.

### "பெண்கல்வி"—அதன் குறைநிறை.

(நமது பெண்களும் அவர்களது தற்காலப் படிப்பும்.)

எல்லா வகைச் செல்வங்களிலும் சிறந்தது கல்விச் செல்வம். அது நம் பெண்களுக்கு மிகவும் அவசியமானது. வீட்டுக் குடும்ப காரியங்கள் பலவற்றையும் நடத்துகிறவளும், கணவனுக்குப் பலகுடும்ப விஷயங்களிலும் உதவிசெய்பவளுமாயிருக்கும் மனைவிக்கு கல்வியறிவு இல்லாவிட்டால் அந்தக் குடும்ப காரியங்கள் சீராக நடத்தப்படமாட்டாது. கல்வியறிவேதான் பேதமை, அஞ்ஞானம் முதலியவற்றை நீக்கிப் பெருந்தன்மை, தயாளம், கருணை, புத்திவிசாலம் முதலியவற்றைக் கொடுக்கும். மேலும் பிறந்ததுமுதல் வயது வருகிறவரை நம் குழந்தைகள் தகப்பனைவிட அதிகமாக தாய்மாரிடத்திலேயே காலத்தைக் கழிக்கின்றன. தாய் படித்தவளாயும் விசால அறிவுள்ளவளாயுமிருப்பாளானால் தன் குழந்தைகளுக்கு சிறுவயதில் நல்ல பயிற்சி கொடுத்து அவர்களை முன்னுக்குக் கொண்டுவரக் கூடும். தாய் மூடமாயிருந்தால் பிள்ளைகளின் சுயசக்தியையுங்கூட கெடுக்கும்படியானவளாயிருப்பாள். சிறு பிள்ளைகள் மூத்தோர் செய்யும் செய்கைகளையும், வழக்கங்களையும் பார்த்து தாமும் அதேமாதிரி செய்யப் பிரயத்தனப்படுகின்றனர். ஆகையால் நம் பெண்களுக்கு கல்வி அவசியம்.

இனி நம் பெண்களுக்குப் போதிக்க வேண்டிய கல்வி எவ்வாறு இருக்க வேண்டுமென யோசிப்போம். படிக்கவும், எழுதவும் கற்றுக் கொடுப்பதே பூர்த்தியான கல்வியாக மாட்டாது. கல்வியென்பது விசாலமான அர்த்த பாவமுள்ள பதம். அதில் படிக்க எழுதத் தெரிவதும்,வீட்டுக்குடும்ப காரியங்கள் பலவற்றையும் சரிவர நடத்தத் தெரிவதும், மாணிடர்க்குச் சிறந்த ஆபரணமாயுள்ள "ஒழுக்கம்" முதலியன அடங்கும். நம் நாட்டில் தற்காலப் பெண்கள் 'படிப்பு' என்பது படிக்க எழுதத் தெரிவதுதான் என்று நினைக்கிறார்கள். தமிழில் ஒரு கடிதம் எழுதத்தெரிவதும், கதை, நாவல் முதலிய புஸ்தகங்களை வாசிப்பதும் இங்கிலீஷில் இரண்டு வார்த்தைகள், தெரிந்திருப்பதுமே பூர்த்தியான கல்வியென்று நினைக்கிறார்கள். கொஞ்சம் படித்தவுடனே கர்வமடைந்து தங்களுக்கு முக்கியமான வீட்டு வேலை முதலியவற்றைக் கற்காமல் நிற்கிறார்கள். பெண்களுக்கு ஏற்பட்ட சமையல் வேலை முதலியவற்றை சரிவரக் கற்காமலும், வீட்டுக் காரியங்களில் சரிவரக் கவனம் செலுத்தாமலுமிருக்கிறார்கள். சமையல்வேலை செய்வதே தங்கள் படிப்புக்கு கௌரவக்குறைவென நினைக்கிறார்கள். அனேகமாய் நமது சிறு பெண்கள் தாம் சமையல் கற்கவேண்டிய காலங்களில் தங்கள் நேரத்தை பூராவும் புஸ்தகம் படிப்பதிலும், தையல் வேலை செய்வதிலும் செலவழித்து விடுகிறார்கள். ஆகையால் தாங்கள் தங்கள் கணவர் வீடு புகுந்ததும் சமையல் வேலையே ஒன்றும் தெரியாதவர்களாய் சமையல் செய்ய ஒரு ஆளின் உதவியைத் தேடுகிறார்கள். சமையல் வேலை தெரிந்த பெண்களும் படித்த கணவர் வீடு புகுந்ததும் சமையல் அறைக்குள்ளே நுழையாமல் தம் காலத்தைப் படிப்பு, சங்கீதம், தையல் வேலை முதலியவைகளிலேயே செலுத்தி சமையலுக்கு ஆள் வைக்கிறார்கள். நம்முள் படித்த கணவர்களும் தம் பெண்களை அவ்வாறே காலத்தைக் கழிக்கத் தூண்டுகிறார்கள். இதனால் வீட்டுக் காரியங்கள் சரிவர நடத்தப்படுகிற

தில்லை. குடித்தனச்செட்டு உள்ளபடி ஏற்படுவதற்கில்லாமற் போகிறது. ஆள்காரன் சரிவர வேலை செய்கிறதில்லை. அவர்களில் அனேகர் கடனுக்காக வேலை செய்கிறார்கள். சமையல் ஆள்களும் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. அவர்களும் அடிக்கடி ஓடிப்போகிறார்கள். சில வீடுகளில் ஒரு நாள் சமையல்காரன் இல்லாவிடில் பெண்சாதியோடு புருஷனும் சேர்ந்து சமையல் செய்ய நேரிடுகிறது. இல்லாவிடில் 'கிளப்புக்கு' ஆள் அனுப்ப வேண்டியிருக்கிறது. இது கொண்டு நம் பெண்களுக்கு சமையல் முதலிய முக்கியமான பாகங்கள் தெரியவேண்டிய தவசியம். ஆள்வைத்து வேலை வாங்கக்கூடிய பணக்காரன் வீட்டிலிருந்த போதிலும் பெண்ணுக்கு சமையல் தெரிந்தால் மட்டுமே சமையல்காரனைக் கொண்டு சரிவர வேலை நடத்த முடியும். சமையல்காரன் இல்லாத வேளைகளில் சமையல் செய்யவும், சமையல்காரனுக்குத் தெரியாத சிற்றுண்டி முதலிய பதார்த்தங்களை தாம் செய்யவும், குடும்பத்தைச் செட்டாக நடத்தவும் முடியும்.

மேலும் நம் பெண்கள் தம் படிப்பை உபயோகமான வழிகளில் செலுத்துகிறதில்லை. தையல் தைப்பது அவர்களுக்குப் பிரியமான வேலையென்று பேர். ஆயினும் தங்கள் ரவிக்கைகளையும், குழந்தை உடுப்புகளையும், தலையணை உறை போன்ற சாமான்களையும் எத்தனை பெண்கள் வீட்டில் தைக்கிறார்கள்? ஓரங்களுக்குதெரிந்த தையல் வேலையிலிருந்து உபயோகமான ரவிக்கை, உடுப்பு முதலியவைகளைப் பெண்கள் தைத்தால் உபயோகமாயும், குடும்பத்துக்கு நிரம்ப செட்டாகவு மிருக்கும். தையல் வேலையில் கைப்பழக்கம், கண்பழக்கம், மனப்பழக்கம் எல்லாம் அடங்கியிருக்கிறது. இந்தப் பழக்கங்கள் கை கூடிவராவிட்டால் அது பிரயோசனமற்றுப் போகிறது.

வாசிப்பதிலும் நம் பெண்கள் உபயோகமற்ற 'நாவல்' கதைப்புஸ்தகங்களையே பெரும்பாலும் வாசிக்கிறார்கள். அவர்கள் கையில் அகப்படும் புஸ்தகம் அனேகம் நல்ல புஸ்தகங்களல்ல. பாக சாஸ்திரம், சுகாதாரவிளக்கம், சிக்குக்காரரை பராமரித்தல், குடும்ப வைத்தியம், நீதிநூல் முதலிய புஸ்தகங்களைப் பெண்கள் வாசிக்க வேண்டியதவசியம். பாக சாஸ்திரம், சுகாதாரவிளக்கம் முதலிய நூல்களை நன்றாய்க் கற்பதால் அந்தக் கல்வியை நாம் நம் வாழ்நாளில் உபயோகப்படுத்தி அனுகூலமடையலாம். அதல்லாமல் எப்போதும் பொழுதுபோக்குப்புஸ்தகங்களான 'நாவல்' முதலியவைகளையே படிப்பதனால் மனம் குவியாமல் சிதறிப்போகிறது. பாகசாஸ்திரம்போன்றஉபயோகமான நூல்களையும், நல்லறிவு புகட்டக்கூடிய நீதிநூல் வசனங்களையும், உலக சமாசாரம் முதலியவற்றை அறிவிக்கக்கூடிய "விவேகசிந்தாமணி," போன்ற மாதாந்தப் பத்திரிகைகளையும், பேப்பர்களையும் படிப்பது நல்லது.

பின்னும் தம் குழந்தைகளைப் படிப்பிக்கும் விஷயத்தில் நம் பெண்கள் அதிக கவனம் செலுத்தவேண்டும். சிறுவயதில் தாய்மார் கற்றுக்கொடுக்கும் கல்வியும், பழக்கங்களும் வெகு நாளைக்கு நிலைநிற்கும். படிக்க எழுதத் தெரிவதிலும், நற்குண நற்செய்கைகளிலும் தாய்மார்கள் தம் சிறு பிள்ளைகளுக்கு சரியான கல்வி புகட்டல்வேண்டும்.

இவ்வாறு நடக்க நம் பெண்களுக்குப் பூர்த்தியான கல்வி சாதனமிருக்க வேண்டும். கல்வி யென்றால் மனப்பழக்கமே. மானிடர்க்கு ஆபரணமாயுள்ள "ஒழுக்கம்" என்பது மனப்பழக்கமின்றி அமையாது. மங்கையர்க்குப் பிராணனிலும் சிறந்த "கற்பும்" பெண்களுக்கு கல்விசாதனமின்றி அமையாததாகும். இவைகளைக் கற்பிக்கக்கூடிய சாஸ்திரங்களை பெண்கள்படிக்கவேண்டும். பலசாஸ்திரங்களையும், சமையல் வேலை, தையல்வேலை, முதலியவைகளோடு பாட்டுப்படிப்பு முதலியவற்றையும் கற்றால் மிகவும் அனுகூலமாயிருக்கும். இவ்வாறு பூர்த்தியான கல்வி இருந்தால் தான் நம் பெண்கள் கர்வமடையாமல் தம் நிலைமையைச் சரிவர உணர்ந்தும் தம் இல்லறத்தைத் தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் நல்லறமாகும்படி சரிவர நடத்தியும் யாவருக்கும் சந்தோஷத்தை உண்டுபண்ணக்கூடும்.

# "CHILDREN'S PAGE."

# சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

## அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

கடவுள் வணக்கம்.

நிலனு நீரு நிமிர கனல்வாயுவு
மிலகுஞாயிறுமின் கதிர்குதிங்களு
மலகில்வானுமணியிய மானுமாய்
உலகமெங்கும் மொளிர்பொருட் போற்றுவாம்.

அவையடக்கம்.

கசடறக்கற்றோர் கல்விக்கழகத்து
கழறுமென்னறிவிலாக் கல்வியின்றணிபு
கடலிற்கடுகிட்டுக் கடைந்தமுதின்சுவை
காணப்புகுந்த காரணம்போலவும்
கனகவம்பலத்துட் கடவுட்டிருநடங்
கண்டுபேய்நடஞ்செயக் கருதல்போலவுமே.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்.

அன்னையும் = தாயும், பிதாவும் = தகப்பனும், முன்னறி = முன்னே காணப்பட்ட, தெய்வம் = தெய்வங்களாவார்.

(இ-ள்.) தாயும் தகப்பனும் முன்னே காணப்பட்ட தெய்வங்களாவார்.

இதன்விரி.

முன்னறிதெய்வம் என்றதினால் மத்தியிலறி தெய்வம் பின்னறி தெய்வமென்றாகிறது.

(1) முன் = ஆதிகாலத்திலேயே, அறி = தெரிந்துகொண்ட, தெய்வம் = தெய்வங்களாவார்.

(2) முன் = பிரத்தியக்ஷத்தில், அறி = தெரிகின்ற தெய்வம் = தெய்வங்களாவார்.

(3) முன் = முதன்மையாக, அறி = தெரிந்துகொள்ளவேண்டிய, தெய்வம் = தெய்வங்களாவார்.

மூன்று காலத்திலும் தெரிந்துகொள்ளத்தக்க தெய்வம் தாய் தந்தையர்களேயாம். முன்னறி என்றதினால் பின்னறி என்றாகிறது; முன்னறி தெய்வம் தாய் தகப்பனென்றதனால் பின்னறி தெய்வம் கடவுளென்றாகிறது. பின்னறி தெய்வமாகிய கடவுளைக் காண்கிறதற்கு முன்னறி தெய்வமாகிய தாய் தகப்பனே காரணமாகிறார்கள்.

எதினாலென்றால் தாய் தகப்பன் புத்திரர்களைப் பெற்று வளர்த்து நோய்கண்முதலியவை அணுகாவண்ணம் காத்து ஐந்தாண்டு முதல் கல்வி நல்லொழுக்கங்களில் பயில்வித்து நல்லினம் சேர்க்கை சாஸ்திர ஆராய்ச்சி முதலியவைகளால் சித்தசுத்தி பெறுவித்து சித்தசுத்தியினால் கடவுளைக் காணச் செய்கிறார்கள. தெய்வம் என்ற பன்மைக்கு சத்தி சிவமென்னும் தெய்வங்களாகிறது. தாய் சத்தியையும் தந்தை சிவத்தையும் ஒப்பாகிறார்கள். சத்தி சிவம் சேர்ந்து நால்வகைப்பிறப்பு எழுவகைத்தோற்றம் எண்பத்துநான்கு லக்ஷம் ஜீவபேதங்கள் தோற்றுவதற்குக் காரணமாயிருக்கின்றது. தாய் தகப்பன் சேர்ந்து புத்திரர்கள் தோன்றுவதற்கு காரணமாயிருக்கிறார்கள். தாய் தகப்பன் முன்னறிதெய்வம் என்பதை நிலைபெறச்செய்ய, "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" "ஆலயந்தொழுவது சாலவு நன்று" என்றாள் ஔவை. இந்நூல் முதலில் அன்னையும் பிதாவு முன்னறிதெய்வ மென்றதினால் தாய் தகப்பனாகிய தெய்வத்தினால் அறம்பொருள் இன்பம் வீடு நான்கையும் அடையலாமென்றாகிறது. கடவுள் ஜீவர்களைப்படைத்து ரக்ஷித்து தீய ஒழுக்கங்களில் பிரவேசித்த விடத்து தண்டித்து அறிவு மேலெழச்செய்து சுகமுறச்செய்கிறார். தாய் தகப்பன் புத்திரர்களைப்பெற்று வளர்த்து அப்புத்திரர்கள் மண்தின்றதினால் உண்டாகிய சோகநோயை நீக்கி அவர்களுக்குப் பிரியமாகிய வெல்லத்தில் மருந்தையொளித்து உண்ணச்செய்து நோயைநீக்கி கல்வி நல்லொழுக்கங்களில் பிரவேசிக்கச்செய்து சுகமடையச் செய்கிறார்கள்.

(1) தாய் தந்தையினும் அருமையான பொருள் வேறொன்றில்லை. "தாயிற்பெறும் பொருடான் பிறிதில்லை." எல்லாப்பொருளையும் பொருளினாலும் அறிவினாலும் சம்பாதித்துக்கொள்ளலாம். தாய் தகப்பனை சம்பாதித்தல் அரிது. தாய் தகப்பனிடத்தில் உள்ளபடி விசுவாசமுடையவனானால் கடவுளிடத்தும் உடையவனாகிறான். கடவுளுக்கு தாயும்

தகப்பனும் உபமானமாகிறார்கள். கடவுள் உபமேயமாகி "அப்பனீ அம்மைனீ" என்றார் திருநாவுக்கரசு சுவாமிகள். கடவுள் கருணைக்கு தாயின்கருணை உபமானமாகிறது. தாயின் கருணைக்கு உபமானமில்லை. "தாராத வருளொலாந் தந்தருளுமௌனியாய் தாயனைய கருணைகாட்டி" என்றார் தாயுமானசுவாமிகள். "தினமுமண்ணுகர் பிள்ளைநோய்க்கிரங்கி தீம்பண்டம் எதிர்காட்டி கனமருந்துகள் ஒளித்துவைத்தழைக்கின்ற கருணையாம் தாய்போல" என்றார் தாண்டவராய சுவாமிகள்.

இவ்வித கடவுள் தன்மையும் கருணைத் தன்மையும் உடைய தாய்க்கு புத்திரர் செய்யவேண்டியது.

(1) தாயை பிரத்தியக்ஷ தெய்வமென்று நினைத்தல்.

(2) உண்டு உடுத்தல் வந்தனை வழிபாடு முதலியவைகளில் குறைவின்றி நடத்தல்.

(3) தாயின்சொற் கடவாதுசிற்றல்.

(உ-ம்.) "தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை" ஸ்ரீராமனைப்போல் மாதுருவாக்கிய பரிபாலனஞ் செய்தல்

(4) தாய்க்கு தன்னை யோக்கியனென்று பிறர் சொல்லும்படி செய்தல்.

(உ-ம்.) ஈன்றபொழுதிற் பெரிதுவக்கும் தன் சான்றோனெனக் கேட்டதாய்.

புத்திரன் தகப்பனுக்கு செய்யவேண்டியது.

(1) வழிபாடு செய்தல்.

(2) சொல்லியவண்ணம் நிற்றல்.

(உ-ம்.) "தந்தைசொல் மிக்க மந்திரமில்லை" பரசுராமனைப்போல் பிதுர்வாக்கிய பரிபாலனஞ்செய்தல்.

(3) இப்புத்திரனைப்பெற இவன் தகப்பன் என்ன தவம் செய்தானோவென்று பிறர் சொல்லும்படி செய்தல்.

(தாய் செய்ததற்கு தனயன் செய்வதில்.)

வேதபுரி என்னும் பட்டணத்தில் வேதபாரகரும் பிராமணோத்தமன் சுகுணியெனும் கற்பு வாய்ந்த மனைவியோடு இல்லறம் வழுவாது நடத்தி வருங்கால் அவர்களுக்கு புத்திரரின்றி அவர்கள் அருந்தவமியற்றி வேதவித்தெனும் புதல்வனைப் பெற்றனர். அப்புத்திரன் கல்வி அறிவு அடக்கம் வாய்மை நித்தியகர்மம் முதலியவைகளில் சிறந்து வரும் நாளில் அவனுடைய பிதாமரித்தனர். மைந்தன் தந்தைக்குரிய கருமங்களை முடித்து தான் காசியாத்திரை செல்லவேண்டுமென்று தன் தாயாகிய சுகுணியைக் கேட்டனன். அதற்கவள் மகனே உன்னை விட்டுப் பிரிந்து உயிர்தரியேன், யானும் உன்னுடன் கூடவருகிறேன் என்றனள் "தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை" "தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை" என்கிற நியாயத்தைக்கொண்டு தாயையும் அழைத்துக்கொண்டு காசிக்குச் சென்றனன். செல்லுமார்க்கத்தில் தாய் முதுமையினால் வருந்தி நடக்கக்கூடாமையைக்கண்டு தன் முதுகிற்சுமந்து சென்று அங்குள்ள கங்கையில் ஸ்நானம்செய்வித்து தானும் செய்து ஜப தபஹோமாதி பிதுர்ஸ்ரார்த்தங்களை முடித்து விஸ்வநாதர் விசாலாக்ஷி அம்மனை தரிசனம்செய்து மீண்டு தன் நகரத்திற்கு வரும் போதும் தாயை முதுகிற்சுமந்து தன் கிரகத்தில் இறக்கிவிட்டு சுமந்துவந்த பிரயாசத்தால் "அப்பா" என்றனன். அதைக்கேட்ட தாய் அருமைப்புத்திரா காசிக்குபோய்த் திரும்பிவருமளவும் என்னை முதுகிற் சுமந்துவந்ததினால் அன்றோ இவ்வளவு சிரமத்தை அடைந்தாய். உன்னைப்போன்ற சற்புத்திரர் இவ்வுலகத்திலில்லை என்றனள். ஆயினும் உன்னை யான் உதிரத்தில் ஒன்பதாவது மாசம் சுமந்து வீட்டின் வாயிற்படியை ஒருதரம் தாண்டியவருத்தத்திற்கு நிகரல்ல என்றனள். அச்சொல்லைக் கேட்டச்சமுற்று தாய் புத்திரருக்குசெய்யும் உதவிக்கு புத்திராசெயும் உதவி இல்லையென்றுணர்ந்து அதுமுதல் தாயையே தெய்வமாகக்கொண்டு உண்டுடுத்தல் வந்தனவழிபாடு முதலியவைகளில் குறைபாடின்றி நடத்திவந்தனன். உலகத்திற்கு மேகம்செய்யும் உதவிக்கு கைம்மாறு இல்லாததுபோல தாய் தகப்பன் செய்யும் உதவிக்கு கைம்மாறு இல்லையென்றுணர்ந்து அவர்களை முன்னறி தெய்வமாகக்கொண்டு எந்நாளும் துதிசெய்வோமாக.

வாழி.

வாழி நான்மறை வாழி நல்லன்பர்கள்
வாழி நல்லற மன்று மறிஞர்கள்
வாழி மேற்றிருக்காட்டுப்பள்ளிமகார்
வாழி கல்விக்கழகமும் வாழியே.